உ

சிவமயம்.

# முகவுரை.

கபிலர் அகவல் என்பது மூன்றாம் வேற்றுமைத் தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித் தொகையாய் இந்நூலுக்குக் காரணப் பெயராயிற்று, இதன் பொருள் கபிலராற் செய்யப்பட்ட அகவற்பாவையுடைய நூலென விரியும்; அகவல் என்பது கருவியாகுபெயராய் அதனாலாகிய நூலை யுணர்த்தும். இப்பெயரிய இந்நூல், கபிலர் என்னும் புலவரால் செய்யப்பட்டது இவர், பகவர் என்பவருக்கும், ஆதி யென்பவளுக்கும் திருவாரூரில் புத்திரராகத் தோன்றிப் பார்ப்பனரென்பவரால் வளர்க்கப்பட்டு வருங் காலத்தில், தமக்கு உபநயனஞ் செய்யத் தொடங்குகையில், தம்மை அவமதித்து அவ்வூர் வேதியர் அச்சடங்கிற்குத் தடை செய்ய, அதனால் மனங்கொதித்து, ஜாதிபேதங் கொண்டுள்ள அவருடைய அஞ்ஞானக் கொள்கையை ஒழித்து உண்மை ஞானத்தை உபதேசித்தற் பொருட்டு இதனைச் செய்தனர்.

இவர் மேற்கூறியபடியே பிறந்து வளர்ந்து, தம்மை அவமதித்த அந்தணர்க் கறிவுறுத்தற் பொருட்டு இவ் வகவலைப் பாடி உபநயனஞ் செய்யப்பெற்று உண்மை மார்க்கத்தை யடைந்து இன்னும் பாதாள லோகத்தில் தவஞ் செய்துகொண் டிருக்கின்றன ரென்பது இவருடைய சரித்திரம். திருவள்ளுவர், அதிகமான், உப்பை, உறுவை, வள்ளி, ஔவை ஆகிய அறுவரும் இவரோடு கூடப் பிறந்தவர்க

ளென்பது இந்நூலில் இவர் வாக்கி[illegible]கின்றது.
ஆனால், இவர்களுடைய சரித்திரங்கள் பற்ப[illegible]ங்களாக
மாறுபட்டுக் கிடக்கின்றன: சிலர், ஆத்திசூடி[illegible]தலிய நூல்
களைச் செய்து பிரசித்திபெற்ற ஔவை கபில[illegible]ன் பிறக்க
வில்லை யென்றும், இவருடன் பிறந்த ஔவை வேறொருத்
தியா யிருக்கலாமெனவும், இரண்டு மூன்று ஔவைகள்
உளரென்றும், அவருள் இவள் எவளோ என்றும் கூறுகின்
றனர்; சிலர், ஔவை பிரசித்திபெற்றவளாகிய ஒருத்தியே,
அவளே தான் கபிலர் முதலியோருடன் பிறந்தவள் என்கின்ற
னர்; சிலர், குறள்செய்த வள்ளுவர் இவருடன் பிறக்க
வில்லை யென்றும், இவரோடு பிறந்தவர் வேறொருவரா யிரு
க்கலா மென்றும், ஜைன மதத்தினர்: வள்ளுவர் தங்கள்
மதத்தைச் சார்ந்தவ ரென்றும், அவர் பெயர் ஏலாசாரி
யென்றும், அவர் சரித்திரம் வேறுவிதமென்றுங் கூறுகின்
றனர்; சிலர், குமாரக் கடவுள் கலியாணஞ் செய்துகொண்ட
வள்ளியே இந்த வள்ளி யென்கின்றனர்; கந்தபுராணத்திலே
அந்த வள்ளியின் சரிதை வேறுவிதமாயிருக்கின்றது; சிலர்,
இவ்வாறு கபிலருடன் ஆறுவர் பிறந்து, பிறந்தபொழுதே
ஒவ்வொரு செய்யுட்கள் கூறியதாக எழுதப்பட்டிருக்கும்
பழைய திருவள்ளுவர் சரித்திரமே பொய் யென்கின்றனர்;
மற்றையர் சரித்திரங்களிலும் பற்பல பேதங்கள் கூறுவாரு
முளர்.

இங்ஙனம் சரித்திரங்களெல்லாம் மாறுபட்டு ஒருவழிப்
படாமல் பலபேதங்களா யிருப்பதால், இந்தக் கபிலருடைய
சரித்திரம், காலம் முதலியன இன்னவைகள் தாமென்று
ஒருவழிப்படுத்தி அவற்றை உறுதியாகக் கூறுதல் என்
னைப்போன்ற சிற்றறிவுடையார்க் கியலாததாயிருக்கின்றது.
சரித்திர வாராய்ச்சிக்காரராகிய சில புத்திமான்கள், ப

விதஆராய்ச்சியைக்கொண்டு ஒருவகையாக ஔவை, திரு
வள்ளுவர், கபிலர் முதலியோருடைய சரித்திரம், காலம்
முதலியவற்றை வரையறுத்துக் கூறியிருக்கின்றனர். அவர்
கள் எழுதிய நூல்களைக்கொண்டு இங்குக் கூறியவர்களின்
சரித்திர பேதங்களை ஒரு முடிவுக்குக் கொண்டுவந்து,
மேற்கூறிய விஷயங்களைப் புத்திமான்கள் யூகித்தறிந்து
கொள்வார்களாக. அவற்றையெல்லாம் ஆராய்ந்து விளக்கி
ஒரு முடிவு கூறுதல் இச்சிறிய நூலின் முகவுரையில் சாத்
தியப்படாது.

அஃதெவ்வாறாயினும், இவ்வகையிலே ஆராய்ந்து பார்க்
கும்போது மேற்கூறிய அறுவரும் கபிலருடன் பிறந்தார்க
ளென்பதும், ஆதியும் பகவரும் இவர்க்குத் தாய்தந்தைய
ரென்பதும், தம்மை, அந்தணர் இழிகுலத்தவரென அவ
மதித்ததன் பொருட்டே கபிலர் இதனைப் பாடின ரென்பதும்
மறுக்கமுடியாத விஷயங்களா யிருக்கின்றன. மற்றவைகள்
எவ்வாறாயினு மாகுக. அஞ்ஞானத்தை யொழித்து உண்மை
யறிவை விளக்கிக் காட்டும் நூல்களுள் இக் கபிலரகவலும்
சிறந்த தொன்றென்பதை அறிவுடையோர் மறுக்கார். இந்
நூல் பார்வைக்குச் சிறிதா யிருப்பினும் விவேகத்தைக்
கொடுப்பதில் பெரிதா யிருக்கின்றது. அதுபற்றியே இச்
சிறிய நூலும் நெடுங்காலத்துக்கு முன்னரே அச்சிட்டு
வெளிப்படுத்தப்பட்டு இதனை அறிவுடையார் பலரும் வாங்கி
வாசித்துப் பலனடைந்து வருகின்றனர். எனினும், இது,
செய்யுளா யிருத்தலை முன்னிட்டுத் தமிழில் பாண்டித்
திய மில்லாத சாமானிய படிப்புள்ள பலர், சில விடங்களில்
இதன் பொருளை யுணரும் விஷயத்தில் இடர்ப்படுகின்ற
னர்; ஆதலின், இதற்கு விளக்கமான வுரையொன் றிருப்
பின் அஃதெல்லோர்க்கும் பயன்படுமென்று பல விவேகி

கள் பன்முறை என்னிடம் தெரிவித்தமையின், என் சிற்றறிவிற் கெட்டியவரையில் இந்நூலுரையை எழுதிமுடித்தேன்.

இதனைப் படிப்பதனால், உலக நடையைத் தழுவிப் பற்றின்றி மேற்போக்காக அநுசரித்து, உண்மை கண்டபின் தள்ளத்தக்க சில பயனற்ற கொள்கைகளில், விவேகத்தை மறைத்து மீளாமல் மனிதனை அழுத்திவிடும் அஞ்ஞானமானது நீங்கி, உண்மையுணர்ச்சியாகிய களங்கமற்ற ஞானமுண்டாகி முத்திக்கு வழிகாட்டுமென்பது நிச்சயம்.

இந்நூல், இவ்வாறு எல்லோர்க்கும் உண்மை ஞானத்தை விளக்கக் கூடியதா யிருத்தலினாலே தமிழர் ஒவ்வொருவரும் இதனை வாங்கி வாசித்துப் பயனை யடையுமாறு பிரார்த்திக்கின்றனன்.

இந்நூலுரையில், என் ஆராய்ச்சிக் குறைவால் சிற்சில பிழைகள் நேர்ந்திருக்கவுங் கூடும்; அங்ஙனம் காணப்படின் அறிவுடையோர் அவற்றை எனக் கறிவித்தால் வந்தனத்துடன் ஏற்றுத் திருத்திக்கொள்வேன்.

இங்ஙனம்:

வீ. ஆறுமுகன்.

உ

கடவுள் துணை.

# கபிலரகவல் மூலமும் உரையும்.

## இணைக்குற ளாசிரியப்பா.

1 நான்முகன் படைத்த நானாவகை யுலகில்
ஆன்ற சிறப்பி னரும்பொருள் கூறுங்கால்
ஆண்முதிதோ பெண்முதிதோ வன்றியலி முதிதோ
நாண்முதிதோ கோண்முதிதோ நல்வினைமுதிதோ
தீவினைமுதிதோ
5 செல்வஞ் சிறப்போ வறிவு சிறப்போ
தொல்லை ஞாலந் தோற்றமோ படைப்போ
எல்லாப் பிறப்பு மியற்கையோ செயற்கையோ
காலத்தாற் சாவரோ பொய்ச்சாவு சாவரோ
நஞ்சுறு தீவினை துஞ்சுமோ துஞ்சாதோ
10 துஞ்சும்போ தந்தப் பஞ்சேந் திரியம்
என்செயா நிற்குமோ வெவ்விடத் தேகுமோ
ஆற்ற லுடையீ ரருந்தவம் புரிந்தால்
வேற்றுடம் பாகுமோ தமதுடம் பாகுமோ
உண்டியை யுண்குவ துடலோ வுயிரோ.

(இதன் பொருள்.) நான்முகன்-நான்கு திருமுகங்களையுடைய பிரமதேவனால், படைத்த - சிருஷ்டிக்கப்பட்ட, நானாவகை - பல விதங்களான, உலகில் - உலகங்களில், ஆன்ற - நிறைந்த, சிறப்பின்-கீர்த்தியையுடைய, அரும் பொருள்-அருமையான பொருளை, கூறுங்கால் - ஆராய்ந்து கூறப்புகுமிடத்து, ஆண் முதிதோ-ஆண்ஜனனம்

உயர்ந்ததோ?, பெண் முதிதோ-பெண்ஜன்னம் உயர்ந்ததோ?; அன்றி-இவையல்லாமல, அலி முதிதோ - ஆணும் பெண்ணுமல்லாத பேடி ஜனனம உயர்ந்ததோ?, நாள் முதிதோ - நக்ஷத்திரங்கள் உயர்ந்தனவோ?, கோள் முதிதோ - கிரகங்கள் உயர்ந்தனவோ?, நல்வினை முதிதோ - நற்செய்கை உயர்ந்ததோ?, தீவினை முதிதோ - கெட்ட செய்கை உயர்ந்ததோ?, செல்வம் சிறப்போ-ஐசுவரியம சிறப்புடையதோ?, அறிவு சிறப்போ-விவேகம் சிறப்புடையதோ?, தொல்லை - பழமையாகிய, மா - சிறந்த, ஞாலம் - உலகமானது, தோற்றமோ - இயற்கையாகத தோன்றியதோ?, படைப்போ-நான்முகனால் சிருஷ்டிக்கப்பட்டதோ?, எல்லாப் பிறப்பும் - உலகத்திற்றோன்றும் எல்லாத் தோற்றங்களும், இயற்கையோ - இயற்கையாக உண்டாயின வோ?, செயற்கையோ - செயற்கையாக உண்டாயினவோ?, (மனிதர்) காலத்தால சாவரோ - தாஙகள் பூரணமாக அழிந்துபோகும் முடிவுகாலததிலே இறப்பார்களோ?, (அல்லது) பொய்ச்சாவு சாவரோ-தேகம் மாததிரம் அழிவதாகிய பொய்யான சாவை யடைவார்களோ?, நஞ்சு உறு - விஷமபோன்ற கெட்டதன்மை பொருந்திய, தீவினை - கெட்டவினையானது, துஞ்சுமோ - நல்வினைகளைச் செய்வதனாலே ஒழியுமோ?, துஞ்சாதோ - ஒழியமாட்டாதோ?, துஞ்சும்போது - நித்திரை செய்யும்போது, அந்தப் பஞ்சேந்திரியம் - அந்த ஐந்து பொறிகளினிடத்துள்ள ஐம்புலன்களும், என்செய்யாநிற்குமோ - என்னசெய்யுமோ?, எவ்விடத்து ஏகுமோ - எவ்விடத்திற் செல்லுமோ?, ஆற்றலுடையீர் - தவஞ்செய்தலில் வல்லமையுடையவர்களே!, அருந்தவம் புரிந்தால்-செய்தற் கருமையான தவத்தைச் செய்தால், (அந்தவததின் பயனாக) வேற்றுடம்பு ஆகுமோ - இந்த மனித தேகம்போய் வேறுதேக முண்டாகுமோ?, தமது உடம்பு ஆகுமோ - தம்முடைய மானிடதேகமே யுண்டாகுமோ?, உண்டியை உண்குவது-ஆகாரத்தையுண்பது, உடலோ உயிரோ-தேகமோ ஆவியோ?

(விசேடவுரை.) நான்முகனாற் படைக்கப்பட்ட பலவகை யுல கங்களில் சிறந்த பொருள் யாதென் றாராய்ந்து கூறப்ப கமிடத்து, ஆண் ஜன்மமே சந்ததிவிருத்திக் கேதுவாயிருத்தலால் அதுவே சிற ந்ததென்று சிலர் கூறுகின்றனர்; சிலர் பெண்ணிருந்தாற்றான ஆண் மூலம் சந்ததியுண்டாம் ஆதலின் அதுவே சிறந்ததென்று கூறு கின்றனர்; சிலர், ஆணும் பெண்ணும் சேர்ந்தே உலகம் நடை பெறவேண்டு மாதலின், அவ்விரண்டு தன்மையுங் கலந்திருக்கும் அலியே சிறந்ததென்று சொல்கின்றனர்; நக்ஷத்திர [illegible] உலக காரியங்கள் நடப்பதற் கேதுவா யிருத்தலின் அவை [illegible] வெனச் சிலர் கூறுகின்றனர்; கிரகங்கள் பகலிரவை யுண்டாக்கி எல்லோர்க்கும் நன்மை தீமைகளை வகுத்து உலகத்தை [illegible] த்துவ தால் அவையே உயர்ந்தவையெனச் சிலர் கூறுகின்றனர்; சிலர், நல்வினை யில்லாவிடின் உலகம் நடைபெறாதாதலின் அதுவே சிற ந்த தென்கிறார்கள்; சிலர், தீவினை யிருப்பதனாலேயே நல்வினை சிறப்படைகின்றது; தீவினை யில்லாவிடின் நல்லது [illegible] தென் றும் கெட்டது இன்னதென்றும் தெரியாமல் போய் [illegible]; ஆத லின், தீவினையே சிறப்புடையதாகு மென்கிறார்கள்; சி[illegible] செல்வ மே உலகத்திற் சிறந்ததாகும், அதன் மூலமாகவே அறிவு முதலி யனவெல்லாம் பிரகாசிக்கின்றன; ஆதலின், செல்வமே சிறந்ததென் கிறார்கள்; சிலர், அறிவே செல்வம், கல்விமுதலிய எல்லாவற்றையும் உண்டாக்குவது, அஃதின்றேல் மற்றைய சிறவா, ஆதலின், அவ் வறிவே உயர்ந்ததெனச் சொல்கின்றார்கள்; சிலர், உலகம் அடிககடி ஒருவரால் படைக்கப்படாமல் இயற்கையாகவே தோற்றி முககாலத் தினு மழியாதிருப்பது ஆதலின், அது சிறந்ததென்கிறார்கள்; சிலர், உலகம் நான்முகனால் படைக்கப்பட்டுத் தோன்றி மறைவது ஆத லின், அது சிறந்ததன்றென்கிறார்கள்; சிலர், உலகத்திலுண்டான பிறப்புக்க ளெல்லாம் இயற்கையாக உண்டாயிருப்பன [illegible] அவை சிறப்புள்ளவையெனக் கூறுகின்றார்கள்; [illegible]

தும் சிருஷ்டிகர்த்தாவின் செய்கையால் தோன்றி மறைவன வாத லின் அவை சிறந்தவை யாகாவென்று கூறுகின்றனர். மனிதர் முடிவில் ஒரு தன்மையுமின்றி அழிந்தேபோகின்றனர்; ஆதலின், அவர்கள், சிறந்தவராகமாட்டார் என்று சிலர் கூறுகின்றனர்; சிலர், ஆத்மர்கள் எப்பொழுதும் இறப்பதில்லை, அவர்கள் தேகங்கள் தாம் அழிகின்றன, ஆதலின், அழியாவியல்பினையுடைய ஆத்மர் களே சிறந்தவர்கள் என்று கூறுகின்றனர்; நற்கருமங்களை யனுஷ்டிப்பதால் தீவினைகள் குறைந்துபோம் ஆதலின், உலகத் தில் நற்கருமங்கள் சிறந்தவைகளாம் என்று சிலர் கூறுவர்; சிலர், என்ன செய்யினும் பழய தீவினைகள் நீங்கமாட்டா, அவை அனு பவித்தே தீரவேண்டும், ஆதலின், நல்வினையினும் தீவினை வன்மை பெற்றதாம் என்றுரைப்பர்; சிலர், தூங்கும்போதும் பஞ்சேந்திரியங் கள் தங்கள் தொழில்களைச் செய்துகொண்டிருக்கும் ஆதலின் அவை சிறந்தனவாம் என்பர்; சிலர், தூங்கும்போது பஞ்சேந்திரியங்களும் தூங்கும் ஆதலின், அவை சிறந்தவையாகமாட்டா என்பர்; சிலர், தவத்தைச் செய்வதனால், இந்த மானுடதேகம் போய் தேவசரீர முண்டாம், ஆதலின் தவஞ் சிறந்ததாம் என்பர்; சிலர், தவஞ்செய்யி னும் மனிததேகமே யுண்டாகுமாதலின் அது சிறந்ததன்றென்பர்; சிலர், ஆகாரத்தையுண்டு ஜீவிப்பது உடல்தான், ஆதலின், அதுவே சிறந்ததாமென்பர்; சிலர், ஆகாரத்தின் சாரத்தால் விருத்தியடை வது ஜீவனே, ஆதலின், அதுவே சிறந்ததாமென்பர். இங்ஙனம், ஒவ்வொருவரும் ஒவ்வொருவிதமாகச் சொல்லும்படி உலகத்தில் ஒவ்வொன்றும் அமைந்திருப்பதால், இன்னது உயர்ந்ததென்றும், இன்னது இத்தன்மையுடையதென்றும் உலகப்பொருள்களை எவ ராலும் வரையறுத்துக் கூறுதல் இயலாது; கடவுள் சிருஷ்டி மனி தர் புத்திக் கெட்டாததாம்; உலகப் பொருள்கள் ஒன்றையொன்று பற்றியனவாயும், ஒன்றில்லாமலொன்று சிறவாதனவாயு மிருக்கும்; ஆதலின், இவற்றில் உயர்வு தாழ்வு காணுதல் அரிது; விவகரிக்கு

மிடத்து ஒவ்வொன்றும் உயர்ந்ததாகவும் தோற்றும், தாழ்ந்ததாகவும் தோற்றும். இரண்டு தன்மைக் குட்படாத தெதுவோ அதுவே சிறந்ததாம். அது எப்பொழுதும் ஒரே தன்மைத்தாகிய சுத்த சைதன்ய வஸ்துவேயாம்.

நான்முகன் : ஒருகாலத்தில் பிரமன் திலோத்தமையைப் படைத்து அவள் அழகைக்கண்டு விரும்பினன்; அவள் வெட்கி நான்கு திக்குகளிலும் ஓடினள்; அப்போது பிரமன் ஒவ்வொரு திக்கிலும் ஒவ்வொரு முகங்கொண்டு பார்த்தனன்; அதனால் அவனுக்கு நான்கு திருமுகங்க ளேற்பட்டன. நான்கு என்பதில் குவ்வீறு கெட்டது. படைத்த - பெயரெச்சம். ஆன்ற-பெயரெச்சம். அரும் பொருள் - பண்புத்தொகை; அருமையின் மையீறு கெட்டது. முதிதோ, சிறப்போ, படைப்போ, இயற்கையோ, செயற்கையோ, சாவதோ, துஞ்சுமோ, துஞ்சாதோ, நிற்குமோ, ஏகுமோ என்பவற்றிலுள்ள ஓகாரங்கள் எதிர்மறை யெச்சப்பொருளன. முதிது-முதுமையது என்னும் பண்புச்சொற்றிரிபு. உலகம் நித்தியமென்பது ஜைனர் கொள்கை. எல்லாம் இயற்கையென்பது நிரீச்சுர வாதிகள் வாதிகளின் கொள்கை; நிரீச்சுர தெய்வம் இல்லையென்பார். பஞ்சேந்திரியம் - மெய், வாய், கண், மூக்கு, செவி என்னும் பஞ்சப் பொறிகளின் வயப்பட்ட ஸ்பரிஸம், இரசம், பார்வை, கந்தம், சப்தம் என்னும் ஐந்தறிவுகளாம்.

15 உலகத் திரே யுலகத் திரே
நாக்கடிப் பாக வாய்ப்பறை யறைந்து
சாற்றக் கேண்மின் சாற்றக் கேண்மின்
மனிதர்க்கு வயது நூறல்ல தில்லை
ஐம்ப திரவி லகலுந் துயிலினால்
20 ஒட்டிய விளமையா லொரைந்து நீங்கும்
ஆக்கை யிளமையி லைம்மூன்று நீங்கும
எழுபது போகநீக் கிருப்பன முப்பதே.

(இ - ள்.) உலகத்தீரே உலகத்தீரே - பூமியிற் பிறந்திருப்பவர்களே! பூமியிற் பிறந்திருப்பவர்களே!!, நாக்கடிப்பு ஆக-நாவில் தழும்பேறும்படி, வாய்ப்பறை அறைந்து-வாயினாற் பறையடித்து முழக்கி, சாற்றக் கேண்மின் சாற்றக்கேண்மின்-சொல்லக் கேட்பீராக! சொல்லக் கேட்பீராக!!, மனிதர்க்கு - மானிடர்க்கு, வயது - ஆயுள் வருடங்கள், நூறு அல்லது - நூறே அல்லாமல், இல்லை - அதிகமில்லை; (அவற்றுள்) இரவில்-இராப்போதில், துயிலினுல் - தூக்கத்தினுல், ஐம்பது அகலும் - ஐம்பது வருடங்கள் கழிந்துவிடும்; ஒட்டிய - பொருந்திய, இளமையால் - பாலப் பருவத்தினுலே, ஓர் - உணர்கின்ற, ஐந்து நீங்கும் - ஐந்து வருடங்கள் கழியும்; ஆகை இளமையில் - நோயாலும் முதுமைப் பருவத்தாலும் உடம்பிளைத்தலிலே, ஐம்மூன்று நீங்கும் - பதினைந்து வருடங்கள் கழியும்; (ஆக இவ்வகைகளில்) எழுபது போக - எழுபது வருடங்கள் கழிய, நீக்கி - இவற்றைத்தள்ளி, இருப்பன - எஞ்சியிருப்பன, முப்பதே - முப்பது வருடங்களேயாம்.

(வி - ரை.) "முற்கூறியவையன்றி, நாம் உயர்ந்ததாகக் கருதியிருக்கும் மானிட ஜன்மத்தைப் பற்றி ஆராயுமிடத்தோ, அதுவும் உயர்ந்ததாகமாட்டாது; மானிடர்க் கேற்பட்ட வயதோ நூறு; அதில் ஐம்பது தூக்கத்திற் கழியும்; அறியாமைப் பருவத்தில் ஐந்து நிர்ப்பிரயோசனமாய்க் கழியும்; அறிவு குன்றியிருக்கும் முதுமைப் பருவத்திலும் நோய்முதலிய துன்பங்களிலும் பதினைந்து நீங்கும்; இவற்றில் எழுபது கழிய எஞ்சி நிற்பது முப்பதேயாகும்;" என, இவ்வடிகளால் ஆயுளின் சிறுமை கூறப்பட்டது.

'உலகத்தீர் உலகத்தீர்' என்பது விளியடுக்கு; இங்ஙனம் ஒரு பொருளில் இரண்டடுக்கி வந்தது, இகழ்ச்சியென்னும் பொருளினை பற்றிவந்த வழுவமைதியாம்; "அசைநிலை பொருள்நிலை இசைநிறைக் கொருசொல், இரண்டு மூன்றுநான் கெல்லைமுறை யடுக்கும்,"

என்பது நன்னூற் பொதுவியற் சூத்திரம். 'சாற்றக் கேண்மின், சாற்றக் கேண்மின்,' என்பதும் இவ்விதிபற்றியே வந்ததென்க. கடிப்பு-குறுந்தடி; கடிப்பாக என்பது பன்முறை மோதலுதலை யுணர்த்திற்று. பறை - ஒருவிஷயத்தைப் பலருமறியும்படி சொல்லுதற்கறி குறியாக அடிக்கப்படும் ஒருவகைத் தோற்கருவி; இங்கே, வாயால் உரக்கக் கூவுதல் பறையறைதலாக உருவகிக்கப்பட்டது. கேண்மின்-முன்னிலைப்பன்மை ஏவல் வினைமுற்று; இதில் கேள்-பகுதி, மின்-பன்மை முன்னிலைவிகுதி. வயது-மானிடர் வாழ்நாளின் ஒரு வருடத்தளவைக் காட்டும் ஒருவகை அளவுப்பெயர். ஐம்பது, ஐம்மூன்று என்பன பண்புத்தொகைகள். ஆக்கை யிளமை யென்பதில், இளமை இளைத்தலைக் குறிக்கும். நீக்கிருப்பன என்பதில் இகரம் தொகுத்தலாயிற்று.

அவற்றுள்,
இன்புறு நாளும் சிலவே யதாஅன்று
25 துன்புறு நாளும் சிலவே யாதலால்
பெருக்கா றொத்தது செல்வம் பெருக்காற்
றிடிகரை யொத்த திளமை யிடிகரை
வாழ்மர மொத்தது வாழ்நா ளாதலால்.

(இ-ள்) அவற்றுள்-என்கின்ற அந்த முப்பதுவயதுகளுள்ளும், இன்பு உறு-சுகத்தையடைகின்ற, நாளும் - தினங்களும், சிலவே - சிலநாள்களே; அதாஅன்று-அதுவல்லாமல், துன்புறு நாளும்-இடரையடையுந் தினங்களும், சிலவே-சிற்சிலவே; ஆதலால்-ஆகையினாலே, செல்வம் - உலகத்திலேற்படும் ஐசுவரியமானது, பெருக்காறு ஒத்தது-(தோன்றிச் சில தினங்களில் மறையும்) நீர்ப்பெருக்கினையுடைய நதியை நிகர்த்ததாகும்; இளமை-(அச்செல்வத்தை யனுபவித்தற்குரியதாகிய) குமாரப்பருவமோ, பெருக்காற்று - அப்பெருக்காற்றின் ஓரத்திலுள்ள, இடி கரை-இடிந்துபோகும் நிலையிலிருக்கின்ற பலஹீனமாகிய கரையை, ஒத்தது - நிகர்த்ததாகும்; வாழ் நாள் -

அச் செல்வத்தோடிருந்து வாழுகின்ற நாளோ, இடிகரை - மேற் கூறிய இடிகரையின்மேலே, வாழ் மரம் ஒத்தது - நிற்கின்ற மரத்தைப்போல நிலையற்றதாகும்; ஆதலால் - இவை யிவவாறிருக்கின்றன வாகையினாலே.

(வி - ரை.) "எஞ்சி நின்ற அம்முப்பது நாட்களுள்ளும் இன்பத்தை யடைகின்ற நாட்கள் சில; துன்பத்தை யடைகின்ற நாட்கள் சில; ஆதலின், அவற்றுட் பெறும் செல்வம் ஆற்றின் வெள்ளப் பெருக்கை யொத்தது; இளமை அவ்வாற்றின் இடிகரை யொத்தது; வாழ்நாளோ அவ்விடிகரையிலுள்ள மரத்தை நிகர்த்தது," என்று இவ்வடிகளில் இன்ப துன்பங்களின் வகையும், செல்வம் இளமை வாழ்நாள் ஆகியவற்றின் நிலையாமையும் கூறப்பட்டன. மனிதர்க்குக் ம் ஆயுளுக்குள் ஏற்பட்ட இன்ப துன்பங்கள் கலந்தே வரும்; அவர்கள் எப்பொழுதும் நிலைத்த இன்பத்தையோ நிலைபெற்ற துன்பத்தையோ அடையமாட்டார்கள்; ஆதலின், 'இன்புறுநாளும் சில துன்புறுநாளும் சில,' என்றார் ஆசிரியர். ஆற்றில், ஒருதினத்தில் திடுமென வெள்ளம் பெருகும், அடுத்ததினத்தில் வற்றிவிடும்; அது போலச் செல்வமும் ஒருவரிடத்தில் ஒரு சமயத்தில் திடுமெனத் தோன்றி மற்றொரு சமயத்தில் அழியும். ஆற்றில் வெள்ளம் பெருகியோடும்போது சிற்சில இடங்களிலுள்ள கரையி லுராய்ந்து கீழே அறுத்துச் செல்லும்; அப்போது அக்கரை அடிப்பலமில்லாமல் விழுந்துவிடும் நிலைமையில் அசைந்துகொண்டிருக்கும்; அதற்கு இடிகரை யென்று பெயர்; அஃது இன்னசமயமென்னும் நியதியின்றி வெள்ளம் ஓடிக்கொண்டிருக்கும்போதே திடுமென விழுந்துவிடும்; அது போல் ஒருவர்க்குச் செல்வம் அதிகரித்துக்கொண் டிருக்கும்போதே அதை யனுபவித்தற்கு மிகவும் பொருத்தமான இளமையானது திடுமெனக் கழிந்து முதுமைவந்துவிடும். மேற்கூறிய இடிகரையில் ஒரு மரமிருக்கும்பக்ஷத்தில் கரை அசையும்போதே அதுவும் தலைசுற்றிக்கொண்டிருந்து தன் வேர்கள் முறிந்தியே ஜலத்தால் அடியிற் பிடுங்

கப்புட்டுப்போவதால் அந்தக் கரை விழுவதற்கு முன்னரே வீழ்ந்தழியும்; அதுபோல் இளமை நடந்துகொண்டிருக்கும்போதே அது நீங்கி முதுமை வருவதற்கு முன்னர் ஆயுள்முடிந்து மரணம் சம்பவிக்கும்; ஆதலின், உலகத்தில் எவையும் நிலைபெற்றனவல்லவென்பது இவற்றின் மூலம் தெளியப்படும்.

'அவற்றுள்' என்பது தனிச்சொல். அதாஅன்று - இன்னிசையளபெடை. நாள்கள் சிலவாயினும், ஜாதி யொருமைபற்றி 'நாளும்' என அவற்றை ஒருமையாற கூறினர் ஆசிரியர். பெருக்காறு, இடிகரை, வாழ்மரம், வாழ்நாள் என்பன வினைத்தொகைகள். ஒத்தது-வினையாலணையும் பெயர். நாள், செலவம் என்பன பெயர்ச் சொற்கள். இளமை-பண்புச்சொல்.

ஒன்றே செய்யவும் வேண்டு மொன்றும்
30 நன்றே செய்யவும் வேண்டு நன்றும்
இன்றே செய்யவும் வேண்டு மின்றும்
இன்னே செய்யவும் வேண்டு மின்னும்.

(இ-ள்.) ஒன்றே செய்யவும் வேண்டும் -ஒரு காரியத்தையே செய்யவேண்டும்; ஒன்றும்-அந்த ஒரு காரியத்தையும், நன்றே-நன்றாகவே, (அதாவது: தருமமாகவே) செய்யவும் வேண்டும் - புரிய வேண்டும்; நன்றும்-அந்த அறத்தையும், இன்றே செய்யவும் வேண்டும் - இற்றைநாளிலேயே இயற்றுதல் வேண்டும்; இன்றும்-அங்ஙனம் செய்யத் துணியும் இன்றையிலும், இன்னே - இப்பொழுதே, செய்யவும் வேண்டும்-புரிதலும் வேண்டும்; (அவவாறு செய்யாமல்) இன்னும் - (தேகம் நிலையற்றதெனத் தெரிந்துகொண்ட) இப்பொழுதும்.

(வி - ரை.) "மேற்கூறியபடி உலகவாழ்வு நிலையற்றதா யிருத்தலினாலே, எப்பொழுதும் நிலைத்த முத்தியின்பத்தைப் பெறுதற்கேதுவாகிய அறத்தை விரைந்து செய்யவேண்டும்," என்பது இவ்

வடிகளின் கருத்து. நன்மை எல்லாவற்றினுஞ் சிறந்து இணையற்றதாய் விளங்குதலின், அதனை எப்பொழுதும் நிலைபேறுடையதும், ஒப்பற்றதுமாகிய ஏகவஸ்துவைப்போல பாவித்து, 'ஒன்று' என்றும், தேகம் க்ஷணநேரமாவது நிலைத்திருக்குமென்று சொல்லும் பெற்றியுடைத் தன்றாகலின் அவ்வறத்தை இன்றே செய்யவேண்டுமென்றும், ஆகிலும் இப்பொழுதே விரைந்து செய்யவேண்டுமென்றும் கூறினர். 'ஒன்றே செய்யவும் வேண்டும்' எனபதிலுள்ள உம்மை இசைநிறைப் பொருளது. மற்றைய வும்மைகள் ஒவ்வொன்றும் முன் சொலலும் விஷயத்தைப்பற்றி நிற்றலால் இறந்தது தழுவியன; இன்னும் இவை, பின்வரும் விஷயங்களையும் தொடர்ந்து நிற்றலால் எதிரது தழுவியன வெனவுங் கூறலாம். ஏகாரங்கள் தேற்றப்பொருளன. ஒன்று - ஒருமை யென்னும் பண்புச் சொற்றிரிபு. நன்று-நன்மையென்னும் பண்புச்சொற்றிரிபு.

நாளை நாளை யென்பீ ராகில்
நமனுடை முறைநா ளாவது மறியீர்
35 நம்முடை முறைநா ளாவது மறியீர்
எப்போ தாயினுங் கூற்றுவன் வருவான்
அப்போ தந்தக் கூற்றுவன் றன்னைப்
போற்றவும் போகான் பொருளொடும் போகான்
சாற்றவும் போகான் றமரொடும் போகான்
40 நல்லா ரென்னா னல்குர வறியான்
தீயா ரென்னான் செல்வரென் னுன்னான்
தரியா னொருகணந் தறுக ணாளன்
உயிர்கொடு போவா னுடல்கொடு போகான்.

(இ - ள்.) நாளை நாளை என்பீராகில் - (அந்த நன்மையைச் செய்யாமல்) நாளைக்குச் செய்வோம் நாளைக்குச் செய்வோம் என்று

சொல்லி வீண்காலங் கழிப்பீராகில், (நாமிருப்பது ... யில்லை; நிச்சயமில்லாவிடினும் நம் ஆயுள் முடிவையாவது காணலா... ன்றோ) நமதுடைமுறைநாள்-நம்முயிரைக்கொண்டுபோக வரும் ... மாகிய நாள், ஆவதும்-ஏற்படுஞ் சமயத்தையும், அறியீர்-அறியமாட்டீர்; நம்முடை முறை நாள் - நம்முடைய உயிர் செல்லத்தக்க கிரமமாகிய நாள், ஆவதும் - ஏற்படுவதையும், அறியீர் - உணரமாட்டீர்; கூற்றுவன்-யமன், எப்போதாயினும் வருவான் - எந்தச் சமயத்திலேனும் உயிரைக் கொண்டுசெல்ல வருவான்; அப்போது - அங்ஙனம் வரும் அச்சமயத்தில், அந்தக் கூற்றுவன்தன்னை - அந்தக் காலனை, போற்றவும் - துதித்தாலும், போகான் - அவன் விட்டுச் செல்லமாட்டான்; (நாங்கள் வேண்டிய பொருள்கள் தருகிறோம், எங்களை விட்டுவிடு என்று திரவியத்தைக் கொடுத்தாலும்) பொருளொடும் - அவன் அந்தப் பொருளைப் பெற்றுக்கொண்டதுடனேயும், போகான்-உயிரை விட்டுச் செல்லான்; சாற்றவும் போகான் - உபசார வார்த்தைகள் கூறினாலும் போகமாட்டான்; (நம்முடைய சுற்றத்தார்களை யெல்லாம் காளைவில் பிடித்துச் சென்றாலும், அவ்வளவில் திருப்தியடைந்து நம்மைமட்டுமாவது விட்டுவிடலாமென்ற எண்ணம் அவனுக் குண்டாகமாட்டா தாதலால்) தமரொடும் - நம் சுற்றத்தாரைப் பிடித்துச் செல்வதோடு மாத்திரமாவது, போகான் - திருப்தியடைந்து செல்லான்; நல்லார் என்னான் - தன்னாற் பிடிக்கப்படுபவரை நல்லவர்களென்றும் கருதமாட்டான்; தீயார் என்னான்-தீயவரென்றுங் கருதமாட்டான்; நல்குரவு-ஒருவர் அடையும் வறுமைக் கஷ்டத்தையும், அறியான்-உணரமாட்டான்; (இன்னும் தன்னிடம் அகப்படுவோரைச்) செல்வர் என்று உன்னான்-தனவந்தர்களென்று கருதி விட்டுவிடமாட்டான்; (ஒருவருக்கு ஆயுள் முடிந்துவிட்டால்) ஒரு கணம்-ஒரு க்ஷணமாயினும், தரியான்-சகித்துத் தாமதிககமாட்டான் (அவனோ) தறுகணாளன் - அஞ்சா நெஞ்சம் படைத்தவன்; உயிர் கொடுபோவான்-(நேர்ந்த சமயத்தில் வந்து தாக்ஷணியமில்லாமல் கஞ்

முடைய) உயிரைக் கைப்பற்றிக்கொண்டு போய்விடுவான்; உடல் கொடு போகான்-நம்முடைய தேகத்தைக் கொண்டுபோகமாட்டான் (நிஷேதமெனத் தள்ளிவிடுவான்).

(வி - ரை.) "மேற்கூறிய நன்மையை இப்பொழுதே செய்யாமல் நாளைச் செய்வோமென்று நினைத்தால், அதுவரை நாம் இருப்போமென்பது நிச்சயமில்லை; எமன் நம்முடைய உயிரைக்கொண்டு போக வரும் நாளையும், நாம் அவன் கையிலகப்பட்டுச் செல்லும் நாளையும் அறியமாட்டோம்; எந்தச் சமயத்திலாவது கூற்றுவன் திடுமென வந்துவிடுவான்; அப்போது அவன் தன்னைப் போற்றினாலும் நம்மை விட்டுப் போகமாட்டான்; தனக்குப் பொருள் கொடுத்தாலும் போகமாட்டான்; உபசாரங் கூறினாலும் போகமாட்டான்; நம் சுற்றத்தவரைப் பிடித்துச் சென்றிருந்தாலும் அவ்வளவில் திருப்தியடைந்து நம்மை விட்டுச்செல்லான்; ஒருவரை நல்லவரென்று நினைத்து விடமாட்டான்; ஒருவர் கஷ்டதசையையும் கவனிக்கமாட்டான்; ஒருவரைத் தீயவரென்று நினைத்துக் கொண்டுபோய்க் கண்டனை புரியவுமாட்டான், செல்வமுடையவரென்று தாக்ஷிணியமாய் ஒருவரை விடவுமாட்டான்; அவன் சமனாகையால், கொண்டுபோகும் விஷயத்தில் எல்லோரையும் ஒரே தன்மையாகவே பாவித்து அவரவர்க்கு நாள் முடிந்தவுடன் விரைந்து நம்மைப் பிடித்துச்செல்வான்; நாம் அபிமானமாக வைத்திருக்கும் தேகத்தையும் கொண்டுபோவானோவெனில், அதனைக்கொண்டு செல்லான்; நம்முயிரையே பற்றிச்செல்வான்; இவ்வாறு நம்முடைய இயல்பு திடுமென மாறக்கூடியதாயிருப்பதனாலே சிறிதும் தாமதிக்காது இப்பொழுதே அறத்தைச் செய்ய வேண்டும்," என்பது இவ்வடிகளின் கருத்து.

"அன்றறிவா மென்னா தறஞ்செய்க மற்றது
பொன்றுங்காற் பொன்றாத் துணை."

என்பது திருக்குறள்.

நாளை நாளை-இழிவுப்பொருள்பற்றிவந்த அடுக்கு. முறை நாள்-கொண்டுபோவதற்குப் பிரமனால் ஏற்படுத்திய நாள். 'நமனுடை முறைநாளாவதும்' என்பதிலுள்ள உம்மை எதிரதுதழுவியது. 'நம்முடை முறைநாளாவதும்' என்பதின் உம்மை இறந்ததுதழுவியது. 'எப்போதாயினும்' என்பதன் உம்மை முற்றும்மை; அஃது இனைத்தென்றறி பொருள்பற்றிவந்தது. மற்றைய உம்மைகள் உயர்வுசிறப்புப் பொருளன. கூற்றுவன்-கூறுசெய்பவன்; அதாவது: உடலையும் உயிரையும் வேறு பிரிப்பவன். தமர்-தம்மைச் சார்ந்தவர்; தம்-பகுதி, அர்-விகுதி.

ஏதுக் கழுவீர் ஏழை மாந்தர்காள்
45 உயிரினை யிழந்தோ வுடலினை யிழந்தோ
உயிரிழந் தழுதுமென் றேதுவீ ராகில்
உடலினை யன்றலா தின்றுங் காண்கிலீர்
உயிரினை யிழந்த வுடலது தன்னைக்
களவு கொண்ட கள்வனைப் போலக்
50 காலு மார்த்துக் கையு மார்த்துக்
கூறை களைந்து கோவணங் கொளுவி
ஈமத் தீயை யெரியெழ மூட்டிப்
பொடிபடச் சுட்டுப் புனலிடை மூழ்கிப்
போய்த்தம ரோடும் புந்திநைந் தழுவது
55 சலமெனப் படுமோ சதுரெனப் படுமோ.

(இ - ள்.) ஏழை மாந்தர்காள் - அறிவற்ற மனிதர்களே! (அக் கணம் அறஞ் செய்யாதிருக்க, கூற்றுவன், நீயகள் மெய்யெனக் கொண்டிருந்த உடலைத் தள்ளி உங்கள் உயிரைக் கொண்டுபோன மாத்திரத்தில் நீங்கள் எதையோ இழந்துவிட்டதாகக் கருதி விவஸ்தையற்று) அழுவீர்-அழுவீர்கள், (அவ்வாறழுவது) ஏதுக்கு-எதற்கு? உயிரினை இழந்தோ-ஆவியைக் கைவிட்டோ? உடலினை இழந்தோ-தேகத்தைக் கைவிட்டோ? உயிர் இழந்து-ஆவியைவிட்டு, அழுதும்

என்று -அழுகின்றோம் என்று, ஓதுவீராகில்-நீர் சொல்வீராயின், (நீங்கள் நிலையென நினைத்திருக்கும் உடல், உயிர் நீங்கின அன்றே அழிந்துபோகிறது; அவ்வாறு அழிந்த) உடலினை-தேகத்தை, அன்று அல்லாது-உதுமறைந்த அன்றைக்கே அல்லாமல், இன்றும் காண கிலீர்-இன்றைக்கும் காணமாட்டீர்கள்; (அவ்வாறு நீங்கள் உடலை நிலையென நினைத்தும்) உயிரினை இழந்த-ஆவியைவிட்ட, உடலது தன்னை-அந்தத் தேகத்தை, களவு கொண்ட - திருட்டுத்தொழிலைக் கைக்கொண்ட, கள்வனைப்போல-திருடனைப்போல, காலும் ஆர்த்து-கால்களையுங் கட்டி, கையும் ஆர்த்து-கைகளையுங் கட்டி, கூறை களைந்து - வஸ்திரத்தை நீக்கி, கோவணம் கொளுவி - உள்ளுடையைத் தொகுத்துக் கட்டி, (ஈமத்திற் கொண்டுபோய்க் கட்டையின்மேற் சேர்த்து) ஈமத்தீயை-சுடுகாட்டு நெருப்பை, எரி எழ - எரிதலுண்டாகும்படி, மூட்டி - கொளுத்தி, பொடிபட - நீறாகும்படி, சுட்டு - எரித்துவிட்டு, புனலிடை மூழ்கி-ஜலத்திற் குளித்து, போய் - வீட்டிற்குச் சென்று, தமரோடும்-சுற்றத்தாரோடும், புந்தி நைந்து-அறிவு கலங்கி, அழுவது - அழும்செய்கை, சலம் எனப்படுமோ - பொய் யென்று சொல்லப்படுமோ?, சதுர் எனப்படுமோ-திறமானதென்று கூறப்படுமோ?.

(வி-ரை.) "எமன் உடலையும் உயிரையும் வேறு பிரித்து உயிரைக் கொண்டு சென்றபின், ஆவி எப்பொழுதும் நிலையுள்ளதாயிருந்தும், அது போய்விட்டதாகவும், உடம்பு தங்களிட மிருப்பதாகவும் மனிதர் கருதி அழுவார்கள்; பின்னர் அவ்வுடலையும் சுட்டு நீறாக்கிவிட்டு அதனை எப்பொழுதும காணுதலர்களாய்த் துக்கித்தழுவார்கள்; இவர்கள் அங்ஙனம் அழுவதைப் பொய்யானதென்றாவது மெய்யானதென்றாவது துணியமுடியாது. ஆதலின், இவர்கள் உண்மை யின்னதென் றுணராது மயக்கிடைப்பட்டவராவர்," என்பது இவ்வடிகளின் கருத்து.

இழந்தோ ரென்றும் இரண்டிலுமுள்ள ஏகாரங்கள் வினாப்பொருளன. அழுதும்-பன்மைத்தன்மை வினைமுற்று; அழு - பகுதி, தும் - விகுதி. இன்றும் என்பதிலுள்ள உம்மை இறந்தது தழுவியது. காலும் என்பதன் உம்மை எதிரது தழுவியது. கையும் என்பதன் உம்மை இறந்தது தழுவியது. ஆர்த்து, கலைந்து, கொளுவி, மூட்டி, சுட்டு, மூழ்கி, என்பன வினையெச்சங்கள். சலம் - பொய். சதுர் - திறமை; இங்கே நிச்சயங் குறித்துநின்றது. முன்னே உயிர் போனதற் கழுதீர், பின்னர் உடலினைச் சுட்டழுதீர்; இவற்றுள் எந்த அழுகை உறுதியானது? நீங்கள் உயிருக் கழுதீர்களா? உடலுக் கழுதீர்களா? இரண்டிற்கு மழுதீர்களா? என்று வினவுதற்கு, 'புந்திநைந்தழுவது சலமெனப்படுமோ சதுரெனப்படுமோ' என்றார்.

பார்ப்பன மாந்தர்காள் பகர்வது கேண்மின்
இறந்தவ ராயுமை யிவ்விடை யிருத்திப்
பாவனை மந்திரம் பலபட வுரைத்தே
உமக்கவர் புத்திர ரூட்டின போது
60 அடுபசி யாற்றுலைந் தாங்கவர் மீண்டு
கையேந்தி நிற்பது கண்டதார் புகலீர்
அருந்திய வுண்டியா லார்பசி கழிந்தது?

(இ-ள்.) பார்ப்பன மாந்தர்காள்-(உலகத்தில் மற்ற வகுப்பாரைக் காட்டிலும் உயர்ந்தவராகவும், வேதசாஸ்திரங்களை யுணர்ந்தவர்களாகவும் கருதப்படும்) பார்ப்பாராகிய மனிதர்களே! (இங்ஙனம் உலகத்தவர் உண்மை யின்னதென் றுணராதிருக்கவும், நீங்கள் பிதுர்க்கள் முதலிய முன்னோர்களை நேரில் பார்ப்பவரைப் போன்று பிதுர்க்கடன் முதலியவற்றைச் செய்கின்றீர்; இன்னும் நான்) பகர்வது கேண்மின்-சொல்வதையும் சற்றே கவனித்துக் கேளுங்கள்! உமை - உங்களை, இறந்தவராய் - முன்னே யிறந்து போன பிதுர்க்களாகக் கருதி, இவ்விடை - இவ்வுலகத்தினிடமாக, பாவனை

இருந்தி - பாவனையாக உட்காரவைத்து, பலபட - பலவிதமாக வுண்டாக, மந்திரம் உரைத்து - மந்திரங்களைச் சொல்லி, உமக்கு - உங்களுக்கு அவர் - அங்ஙனம் பாவனை செய்தவர்களாகிய, புத்திரர் - குமாரர்கள், ஊட்டினபோது - ஆகாராதிகளை உண்பித்த சமயத்தில், அடு பசியால்-வருத்துகின்ற பசியினாலே, குலைந்து - நிலை தளர்ந்து, ஆங்கு - அவ்விடத்தே, அவர் இறந்துபோன பிதுர்க்களாகிய அவர் கள், மீண்டு - அவ் வுலகத்தைவிட்டுத் திரும்பிவந்து, கையேந்தி நிற்பது - அவவுணவை வாங்கும் பொருட்டுக் கரங்களை ஏந்திக்கொண்டு நிற்பதை, ஆர் கண்டது - பார்த்தவரியாவர்? அருந்தியது - அவ வாறு வந்து கையேந்தி வாங்கிச் சாப்பிட்ட, உண்டியால்-உணவால், ஆர் பசி கழிந்தது - எவருடைய பசி நீங்கிற்று? புகலீர் - இவற்றை யெல்லாம் ஆராய்ந்து சொல்லக்கடவீராக.

(வி - ரை.) "மேற்கூறியபடி மனிதர் அவ்வாறு இறந்ததற் கழுவதுமின்றி, அங்ஙனம் இறந்த பிதுராக்களுக்கு மந்திரஞ்சொல்லி ஆகாராதிகளையும் படைத்துப் பூசனை புரிகின்றீர்; அவர்கள் வந்து அவ்வுணவுகளை வாங்கி யுண்பதை நீங்கள் காணவு மாட்டீர்கள்; ஆதலின், இவவிஷயத்திலும் நீங்கள் விவஸ்தை யற்றவர்களாகவே யிருக்கின்றீர்," என்பது இவவடிகளின் கருத்து. பிராமணர் தம்மைத் தாழ்மையாகக் கருதியதை நீக்கும்பொருட்டே கபிலர் இந்நூலைச் செய்தனராகலானும், பிராமணர் தம்மை உயர்ந்தவராகக் கருதியிருந்தும் அவரும் இங்ஙனம் மயக்கிடைப்பட்டுழன்றன ரென்பதை விளக்கப் புகுந்தனராகலானும், இங்கு, 'பார்ப்பன மாந்தர்காள்,' என அவரையே முக்கியமாக விளித்துக் கூறினர். ஆத்மாவின் தன்மையை நோக்குங்கால் இறந்தவரும் தேகத்தோ டிருப்பவரும் எப்பொழுதும் நிலைபெற்ற ஒரேதன்மை யுடையவராகலின், இறந்தவர் செய்கையையும் இருப்பவர் செய்கையையும் விரவிப் பொதுவாக மனிதர்பாலேற்றி முன்னிலையாகவும், படர்க்கையாகவும் வைத்துக் கூறினர். பாவனையாக இருத்துதல் - இருப்பதாகப் பாவித்தல். அவர்

புத்திரா - இருபெயரொட்டுப் பண்புத்தொகை. 'ஊட்டின' என்ப தற்கேற்ப, 'ஆகாராதிகள்' என்னும் செயப்படுபொருள் வருவிக்கப் பட்டது. அடுதல் - கொல்லுதல்; அஃதிங்கே வருத்தத்தை யுணர்த் திற்று. கண்டது - பார்த்தசெய்கை; அஃதிங்கே அச்செய்கை யுடை யாரை விளக்கிற்று.

ஒட்டியர் மிலேச்ச ரூணர் சிங்களர்
இட்டிடைச் சோனகர் யவனர் சீனத்தர்
65 பற்பலர் நாட்டிலும் பார்ப்பா ரிலையால்.

(இ - ள்.) (மேற்கூறியபடி உலகத்தின் உண்மை யியல்பை யுணராதிருந்தும், நான்குவகைச் சாதிகளை நீங்களே பிரித்துக்கொண்டு அவர்களுள் நீங்களே உயர்ந்தவர்களென்றும் உங்களாலேயே உலகம் நடைபெறுகிறதென்றும் கருதியிருக்கின்றீர்கள்; நீங்களிருக்கும் இவ்விந்திய நாடொழிய) ஒட்டியர்-ஒட்டியரும், மிலேச்சர்-மிலேச்சரும், ஊணர் - ஊணரும், சிங்களர் - சிங்களரும், இட்டிடை-அற்பமான தன்மையையுடைய, சோனகர் - துலுக்கரும், யவனர் - யவனரும், சீனத்தர் - சீனரும், (ஆகிய) பற்பலர் நாட்டிலும் - பற்பலரிருக்கின்ற தேசங்களிலும், பார்ப்பார் இல்லை - பிராமணர்கள் இல்லை, (அவ்வாறில்லாததால் அவைகள் வளப்பத்தில் ஏதேனும் குறைவுற்றிருக்கின்றனவா?)

(வி - ரை.) "மனித வர்க்கத்தாருள், ஆண், பெண் ஆகிய இரண்டே சாதிகள் ஏற்பட்டிருக்க, நீங்களே நான்குவகையைப் பிரித்துக் கொண்டு அவ்வகைகளுள்ளும் வேதியர்களாகிய நீங்களே சிறந்தவர்களென்றும், உங்களாலேயே உலகத்தில் எல்லாக் காரியங்களும் நடைபெறுகின்றனவென்றும் எண்ணிக் களிக்கின்றீர்; அவ்வாறு உங்களாலேயே உலகில் எல்லாம் நடைபெறக் கூடியனவாயிருக்குமாறால், நீங்களில்லாத அநேக தேசங்களிருக்கின்றனவே; அவை யெல்லாம் நீங்களிருக்கும் தேசத்தைக்காட்டினும் மிகச் செழிப்

படைத் திருக்கின்றனவே? நீங்களில்லாததால் அவை பாழடைந்தல்லவோ இருக்கவேண்டும்; அங்ஙனம் பாழடையாமல் செழிப்புற்றிருத்தற்குக் காரணமியாது? இதனாலேயே நீங்கள் கொண்டிருக்கும் கொள்கை பேதைமை யென்பது விளங்கவில்லையா," என்பது இவ்வடிகளின் கருத்து.

ஒட்டியர்-ஐம்பத்தாறு தேசங்களுள் ஒன்றாகிய ஒட்டியமென்னும் தேசத்திலுள்ளவர். மிலேச்சர்-துருக்கியருள் ஒருவகைக் காட்டுஜாதியார். ஊணர் - ஊணமென்னும் தேசத்திலுள்ளார். சிங்களர்- இலங்கைத் தீவில் சிங்களநாட்டிலுள்ளவர். சோனகர்-துலுக்கர். யவனர்-யவனதேசத்தார்; இவர்கள், கம்மியத்தொழிலில் சிறந்தவர்; இதனை,

"பொன்சொரி கதவுதாளிற் றிறந்துபோன் யவனப்பேழை"
"மணியியல் யவனச்செப்பின் மங்கலத் துகிலைவாங்கி,"

என்னும் சீவகசிந்தாமணிச் செய்யுளடிகளா லுணர்க. சீனத்தர்-சீனதேசத்தவர். இட்டிடை-அற்பம்; அஃதிங்கே தொழின் மேற்று.

முற்படைப் பதனில் வேறாகிய முறைமைபோல்
நால்வகைச் சாதியிந் நாட்டினி லிட்டீர்
மேல்வகை கீழ்வகை விளங்குவ தொழுக்கால்
பொற்புறு பெறவையும் பிறப்பினில் வேறே
70 அவ்விரு சாதியி லாண்பெண் மாறிக்
கலந்து கருப்பெறல் கண்டது முண்டோ
ஒருவகைச் சாதியா மக்கட் பிறப்பினில்
இருவகை யாகநீ யியம்பிய குலத்து
ஆண்பெண் மாறி யிணைதலு மணைந்தபின்
75 கருப்பொறை யுயிர்ப்பதுங் காண்கின்றிலீரோ
பாகிலைத் தெங்கதனிற் கிடைப்படு கின்றதோ
ஆங்கிலைத் தந்தவித் தங்குரித் திடுமோ

மாறிவே றாகும் வழக்கமொன் றிலையே
பூசுரர்ப் புணர்ப் புலைச்சி பயின்ற
80 புத்திர ராயினோர் பூசுர ரலரோ
பெற்றமு மெருமையும் பேதமாய்த் தோன்றல்போல்
மாந்தரிற் பேதமாம் வழியெவர் கண்டிலார்
வாய்நாறு முயப்புமொய் வண்ணமே மாடபிணினில்
மேவு முண்மை பாவையும வெளிப்பட லின்றே.
85 தெரிபிமைப் புலியின் மடநைத கேகிற்
பருகற வோதிய பார்ப்பா ரனான்
வடதிசைப் பார்ப்பான் தென்றிசைக் கேகின்
நடையாற் கோளரிய புலைய னவான்.

(இ - ள்.) (மேற்கூறியபடி நீங்கள் ஜாதிகளைப் பிரித்ததிலும் பிறர் நம்பும்படி) முற்படைப்பதனில்- ஆதி சிருஷ்டியிலே, வேறாகிய முறைமைபோல அவை வேறாகப் பிரிந்த கிரமம்போலச் சாஸ்திரங்களிற்கூறி, இந்நாட்டினில்- இந்த இந்தியநாட்டிலே, நால்வகைச் சாதி- அந்த நால்வகைச் சாதிகளையும், நாட்டினீர்- நிலைநிறுத்தினீர்; (அவ்வாறு நீங்கள் நாட்டினாலும் உயர்ந்த சாதியும் தாழ்ந்த சாதியும் பிறப்பினால் ஏற்படமாட்டா); மேல்வகை- உயர்ந்தவகுப்புக்களும், கீழ்வகை- தாழ்ந்தவகுப்புக்களும், விளங்குவது- உலகத்தில் மனிதவகுப்பாரில் தோன்றுவது, ஒழுக்கால்- அவரவர்களுடைய நன்னடை துன்னடை ஆகிய ஒழுக்கங்களினாலேயே ஏற்படுவனவாம்; (பிறப்பினால் ஜாதி பேதங்கள் ஏற்படுவன வேறு விதமாம்; எவ்வாறெனில், மனிதர் ஒரு வகுப்பு, எருது ஒரு வகுப்பு, எருமை ஒரு வகுப்பு; இவைபோல ஒவ்வொரு ஜாதியும் பிறப்பினால் பேதமாமேயன்றி ஒரே வகுப்பில் பல பேதங்கள் ஏற்பட நியாயமில்லை; அப்படி ஏற்படுவதற்கு இவ்வகைப் பிறப்புப் பேதங்களுள் ஒன்றினொன்று கலக்கமாட்டா; ஒரே வகுப்பில், ஒழுக்கத்தால் பிரிந்து பேதப்பட்டிருப்பினும் ஒன்றோடொன்று கலந்து சந்ததி விருத்தியுண்டாம்; இதற்குதாரண

மாக) பெற்றமும்-பசுவும், எருமையும்-மேதியும், பிறப்பினில்-பிறப்பால், வேறே-வேறுமையரோ; (அப்படி யிருப்பதால் அவ்விருஜாதியும் கலக்கமாட்டா) அவ்விரு ஜாதியில்-அவ்விரண்டு வகுப்புள்ளும், ஆண் பெண் மாறி - ஆணும் பெண்ணும் மாறுபட்டு, (அதாவது: ஒரு ஜாதி ஆணும் ஒரு ஜாதிப் பெண்ணுமாக நேர்ந்து) கலந்து-புணர்ந்து, கருப்பெறல்-கருப்பம் தரித்தலை, கண்டதுண்டோ-எவராயினும் பார்த்ததுண்டோ? (இல்லை); (இதுபோல, மனிதவர்க்கத்தாருள் உண்டோவென்று ஆராய்ந்து பார்க்குமிடத்து இவ்விதம் நிகழாதிருப்பதில்லை; நீங்கள் நான்கு வகையாகப் பிரித்த அவர்கள் மனிதரென்னும் ஒரே வகுப்பினராயிருப்பதை முன்னிட்டு ஒழுக்கத்தால் பேதப் பட்டிருப்பவர்களுள்ளும் ஆண் பெண் மாறிக் கலந்தால் சந்ததி உற்பத்தியாகிவிடுகின்றது; இவ்விதம்) ஒரு வகைச் சாதியாம் - ஒருவித வகுப்பாகிய, மக்கள் பிறப்பில் - மனித ஜன்மத்தில், நீர்-நீங்கள், நால்வகையாக - நான்கு வகையாக, இயம்பிய-கூறிய, குலத்து-ஜாதிகளிலே, ஆண் பெண் மாறி-ஆணும் பெண்ணும் மாற்றமாக, அணைதலும்-கூடுதலும், அணைந்தபின்-அங்ஙனம் கூடியபின், கருப்பொறை உயிர்ப்பதும் - கருவாகிய பாரத்தைத் தாங்கிப் பெண்கள் பிள்ளைகளைப் பெறுவதையும், காண்கின்றிலீரோ - அறிகிலீரோ? (இன்னும் நீங்கள் இவ்வாறு பேதைமையால் பிரித்த சாதிகளில் ஒரு சாதி ஆணும், ஒரு சாதிப் பெண்ணும் மாறிக் கூடிப் பிறந்த பிள்ளைகளை இழிந்தவராகக் கருதுகின்றீர்; அப்படியே உங்கள் அபிப்பிராயம்போல் மனித வகுப்பாரில் ஜாதிபேதத்தை வைத்துக்கொண்டாலும் மேற்கூறியபடி பிறக்கும் எல்லோரையும் இழிவுடையாராகக் கருத நியாயமில்லை; உயர்ந்த ஜாதிப்பெண்ணும் இழிந்த ஜாதி ஆணுங் கூடிப்பெற்ற பிள்ளையை வேண்டுமானால் இழிவாக நினைக்கலாம்; உயர்குலத்தானும் இழிகுலத்தவளும் கூடிப் பெற்ற பிள்ளையை எங்ஙனம் தாழ்மையாகக் கருதுதல்கூடும்? அப்பிள்ளை எவ்விதத்தாலும் தாழ்ந்தவனாகமாட்டான்) எந்நிலத்து-எந்தப் பூமியில்,

எந்த வித்து-எவ்வகையான விதை, இடப்படுகின்றதோ-விதைக்கப் படுகின்றதோ, அந்நிலத்து-அந்தப் பூமியில், அந்த வித்து - அதே விதை, அங்குரித்திடும் அல்லால்-முளைக்குமே யல்லாமல், மாறி - மாற்றமடைந்து, வேறு ஆகும்-வேறொன்றாக அந்நில பேதத்தால் முளைக்கும், வழக்கம் ஒன்று-ஒரு வழக்கம், இல்லை-ஏற்படுவதில்லை; (அதுபோல) புலைச்சியர்-உடகளா ஜாதிப்பிரிவினையால் நீச ஸ்திரீக ளெனக் கருதப்படுவோர், பூசுரர் புணர்ந்து - பிராமணரைக் கூடி, ஈன்ற-பெற்ற, புத்திரராயினோர்-குமாரரானவர், பூசுரர் அல்லரோ-பிராமணராகமாட்டாரோ? (ஆவர்; ஆதலின், நீங்கள் கொண்டிருக் கும் ஜாதிபேதகொள்கை, எவ்வகையிலும் ஆராயுமிடத்துப் பேதை மையுடையதாகவே காணப்படும்; மனித வகுப்பில் ஒழுக்கத்தாலும் தோற்றத்தாலும் பேதங் காணலாமேயன்றி, பிறப்பால் பேதங்காணு தற் கேதுவில்லை) பெற்றமும் - பசுவும், எருமையும்-மேதியும், பேத மாய்த் தோன்றல்போல்-எல்லாவகைக் குணங்களாலும் வெவ்வேறு ஜாதியாகத் தோன்றுவதுபோல, மாந்தரில்-ஒரே வகுப்பாகிய மனி தர்களுக்குள்ளே, பேதமாம் வடிவு-வெவ்வேறு வகையான உரு வத்தை, யாவர் கண்டுளார்-பார்த்தவரியாவர்? (ஒருவருமில்லை; மனித ருடைய) வாழ்நாள்-ஆயுளும், உறுப்பு-அவயவங்களும், மெய்வண்ண மோடு-தேகவடிவமும், அறிவினில்-புத்தியில், வேற்றுமையாவதும்-வெவ்வேறு வகைப்படுவதும், வெளிப்படல் இன்று - தோற்றுவ தில்லை; (ஆதலின், நீங்கள் பிறப்பால் உயர்வோ தாழ்வோ கருத வேண்டாம்; ஒழுக்கத்தைப்பற்றியே உயர்வு தாழ்வு கருதுவீராக!) தென்றிசைப் புலையன்-தெற்குத் திக்கிலுள்ள நீசனும், வடதிசைக்கு ஏகின்-புண்ணிய பூமியாகிய உத்தர திக்கில் சென்றால், பழுது அற-குற்றம்நீங்க, ஓதி-வேதத்தை ஓதியுணர்ந்து, பார்ப்பான் ஆவான்-பிராம ணனாவான்; வடதிசைப் பார்ப்பான்-உத்தரதிசையிலுள்ள வேதியன், தென்றிசைக்கு ஏகின் - தக்ஷண திக்கிற் போவானானால், நடையது கோணி - தான் உத்தரதிக்கில் பழகியிருந்த பிராமண வொழுக்கம்

மாறுபட்டு, புலையன் ஆவான்-நீச வொழுக்கங்களைக்கொண்டு நீசனாய் விடுவான், (இதனாலேயே ஒழுக்கத்தால் உயர்வு தாழ்வு வற்படுமென்பது உங்கட்கு நன்கு புலப்படுமே )

(வி - ரை.) "மேற்கூடியபடி இவ்விந்திய நாட்டைத் தவிர மற்றைய நாடுகளில் பிராமணர் முதலிய ஜாதி வகுப்புக்கள் இல்லாதிருந்தும், பிராமணர்களே! நீங்கள் மாத்திரம் ஆதிகாலந்தொட்டே இங்கு வெவ்வேறு சாதிகள் பிறப்பால் உண்டானதுபோல நான்கு வகைச் சாதிகளைப் பிரித்து நிலைநிறுத்தினீர்; உயர்வும் தாழ்வும் ஒழுக்கத்தால் நிகழ்வனவேயன்றிப் பிறப்பால் நிகழ்வனவல்ல; உலகத்தில் மானிடர், அவரவர் நடக்கைக்குத் தக்கபடி உயர்ந்தவர்களாகவும், தாழ்ந்தவர்களாகவும் பிரிந்திருக்கின்றார்களே யன்றி, பிறப்பால் அங்ஙனம் பிரிவதில்லை. பிறப்பால் மானிடர் ஒரே தன்மையுடையவராவர்; இவர்களுள், எருதும் எருமையும்போல வகுப்பு பேதமிருக்கும் பக்ஷத்தில், உங்களால் பிரிக்கப்பட்ட பல வகைச் சாதிகளுள் ஒரு வகை ஆணும் மற்றொருவகைப் பெண்ணும் கூடிச் சந்ததி உற்பத்தியாவதற்கேதுவில்லை; மனித வகுப்பாருள் எந்த ஆணும் எந்தப் பெண்ணும் கூடினும் சந்ததி உற்பத்தியாகின்றது; பசுவும், எருமையும் வெவ்வேறு வகையா யிருப்பதால் அவற்றுள் ஒருவகை ஆணும் மற்றொருவகைப் பெண்ணுங் கூடுவதுமில்லை, சந்ததி தோன்றுவதுமில்லை; இதனாலேயே மனிதர் ஒரே வகுப்பினரென்பது விளங்கவில்லையா? இன்னும் நீங்கள், உங்களுடைய ஜாதிப் பிரிவினையால், ஒருவகுப்பானும் ஒரு வகுப்புப் பெண்ணும் கூடிப்பெற்ற பிள்ளைகளையெல்லாம் இழிவானவர்களென்று கருதுகிறீர்கள்; அங்ஙனம் கருதுவதில் உயர்குலப் பெண்ணும் இழிகுலத்தானுங் கூடிப்பெற்ற பிள்ளையை யெண்டோமேல் உங்கள் கொள்கைப்படி தாழ்வாகக் கருதலாம்; இழிகுலப் பெண்ணும் உயர்குலத்தானுங் கூடிப்பெற்ற பிள்ளையை இழிவாகக் கூறல் தகுதியாமா? பெண் இழிவானவளா யிருப்பினும் கருவானது உயர்

குலத்தான் நாதத்தால் உற்பத்தி யானபடியால் அதனின்றும் பிறந்தவன் உயர்ந்தவனே யாவன்; ஒரு வித்தை ஒரு நிலத்திலிட்டால் அவ் வித்தானது தன்னியற்கைப்படி முளைக்குமே யன்றி நிலபேதத்தால் வேறுவகை யாகாது; இதைக்கொண்டு, வேதியனைக் கூடிப் புலைச்சி யீன்ற பிள்ளையைப் பிராமணனென்றே நீங்கள் ஏன் கருதக்கூடாது? இவற்றையெல்லாம் நன்கு ஆராயின், மனிதவர்க்கத்தாருள் பேதமென்பது காணப்படாது; பசுவும் எருமையும் பேதமாகத் தோற்றல்போல, மானிடருள் பேதந் தோற்றுவதை எவருங் காணமாட்டார்; இன்னும், தென்றிசையிலுள்ள, உங்களால் நீசனெனக் கருதப்படும் ஒருவன் வடதிசைக் கேகினால் அவன் வேதமுதலியன வோதி ஒழுக்கத்தால் பார்ப்பானாகிவிடுவான்; வடதிசையில் உங்களால் பார்ப்பானெனக் கருதப்படும் ஒருவன் தென்றிசைக் கேகின் தான் கற்ற வேதம் முதலியவற்றை மறந்து ஒழுக்கங்குன்றி மாறுபட்ட நடையைத் தழுவி நீசனாய்விடுவன்; வகுப்புயர்வும் தாழ்வும் ஒழுக்கத்தாலேயே நிகழ்கின்றன வென்பதை இதன்மூலம் தெரிந்து கொள்வீராக," என்பது இவ்வடிகளின் கருத்து.

நால்வகைச் சாதி: பிராமணர், க்ஷத்திரியர், வைசியர், சூத்திரர் என்பன. பெற்றம் - பசு; இது பசுச்சாதிப் பொதுப்பெயர். 'ஆண் பெண் மாறிக் கலந்து' என்பதற்கு, 'ஒருவகை ஆணும், மற்றொரு வகைப் பெண்ணும் தங்கள் குல வியற்கைக்கு மாற்றமாகக் கூடி' என்பது பொருள். 'கண்டதுண்டோ' என்பதிலுள்ள ஏகாரம் எதிர்மறைப் பொருளது. சீவர்களெல்லோரும், 'அந்தக்கரண, ஆபாச, சைதந்ய சீவன்' என்றபடி இம்மூன்றின் கூட்டமாகிய ஒரேவகைத் தோற்ற முடையவ ராகலானும், மனிததேகங்க ளெல்லாம், ஐம்பூதங்களாலும் ஆக்கப்பட்டு, தசைநாரும், உதிரமும், நரம்பும் கொழுப்பும், கபமும், நீரும், மலமும், உரோமமும் உடையனவாயும்; ஐம்பொறிகளை யுடையனவாயும்; உபத்தம், பாணி, பாதம், பாயுரு, வாக்கு என்னும் கன்மேந்திரியங்களை யுடையனவாயும் ஒரே

தன்மையனவாய் அமைக்கப்பட்டிருத்தலானும், அவரை, 'ஒருவகைச் சாதியா மக்கட் பிறப்பு' என்றார் ஆசிரியர். 'காண்கின்றிலீரோ' என்பதிலுள்ள ஓகாரம் வினாப்பொருளது. முனிவர்களும் புலைச்சிக்கும் பிறந்தவரென்று வேதியர் தம்மை இழிவாகக் கூறியபடியால், அதனை மறுத்தற்பொருட்டே, 'பூசுரர்ப் புணாநது புலைச்சிய ரீன்ற, புத்திரராயினோர் பூசுர ரல்லரோ?' எனக கூறினர் கபிலர். 'எவர் கண்டோரார்' என்பது எதிர்மறையெச்சம். உயர்ந்த சாதிக் கரு இழிந்த சாதிப் பெண் வயிற்றில் தரிக்கினும் உயர்ந்ததேயாகு மென்பதையும், தாழ்ந்தது உயர்ந்த வயிற்றிற் சாரினும் தாழ்ந்ததேயாகு மென்பதையும், மனிதர் ஒழுக்கத்தாற் பேதமாவரேயன்றிப் பிறப்பால் பேதமாகாரென்பதையும், தென்னாடு தாழ்ந்தது வடநா டுயர்ந்தது என்பதையும்,

"கடல்சார்ந்து மின்னீர் பிறக்கு மலைசார்ந்தும்
உப்பீண் டுவரி பிறத்தலாற் றத்தம்
இனத்தனைய ரல்ல ரெறிகடற்றண் சேர்ப்ப
மனத்தனையர் மக்களென் பார்."

"களர்நிலத்துப் பிறந்த வுப்பினைச் சான்றோர்
விளைநிலத்து நெல்லின் விழுமிதாக் கொளவர்
கடைநிலத்தோ ராயினுங் கற்றறிந் தோரைத்
தலைநிலத்து வைக்கப் படும்."

"எந்நிலத்து வித்திடினுங் காஞ்சிரங்காழ் தெங்காகா
தென்னாட் டவருஞ் சுவர்க்கம் புகுதலால்
தன்னாற்றா னாகு மறுமை வடதிசையும்
கொன்னாளர் சாலப் பலர்."

என்னும் நாலடிச் செய்யுட்களா னுணர்க. வடநாடு தேவர்களும் முனிவர்களும் தங்கப் பெறுதலானும், வேதங்கள் மிகப் பயிலுதலானும், ஆரியர்க் குரித்தாதலானும் அஃதுயர்ந்த தென்றும்; தென

ஞூடு எமன்திசை யாகலானும், தேவபாஷை முதலியன மிகப் பயிலாமையானும் தாழ்ந்ததென்றுங் கூறுப.

அதுநிற்க,
90 சேற்றிற் பிறந்த செங்கழுநீர் போலப்
பிரமற்குக்
கூத்தி வயிற்றிற் பிறந்த வசிட்டரும்
வசிட்டர்க்குச்
சண்டாளி வயிற்றிற் பிறந்த சத்தியரும்
95 சத்தியர்க்குப்
புலைச்சிதோள் சேர்ந்து பிறந்த பராசரும்
பராசருக்கு மீன்
வாணிச்சி வயிற்றிற் பிறந்த வியாசரும்
இந்நால்வரும்,
100 வேதங்க ளோதி மேன்மைப் பட்டு
மாதவ ராகி வயங்கின ரன்றோ?

(இ - ள்.) அதுநிற்க - மேற்கூறிய அவ்விஷயம் நிற்க, (நான் கூறியதற்கு உதாரணமாக) சேற்றிற் பிறந்த-சேதகத்திலே தோன்றிய, செங்கழுநீர்போல - செங்குவளை மலர்போல, பிரமற்கு - பிரமதேவனுக்கு, கூத்தி - நிருத்தமாதாகிய ஊர்வசியினது, வயிற்றில் - உதரத்திலே, பிறந்த-தோன்றிய, வசிட்டரும் - வசிட்ட முனிவரும்; வசிட்டர்க்கு-அந்த வசிட்ட முனிவர்க்கு, சண்டாளி வயிற்றில்-சண்டாளத்துவமடைந்த அருந்ததியின் வயிற்றிலே, பிறந்த-உதித்த, சத்தியரும்-சத்தியமுனிவரும்; சத்தியர்க்கு - அந்தச் சத்தியமுனிவருக்கு, புலைச்சி தோள்-நீசத்துவமடைந்த பெண்ணின் தோள்களை, சேர்ந்து-அவர் அணைந்ததனுல், பிறந்த-உற்பவித்த, பராசரும்-பராசமுனிவரும்; பராசருக்கு - அந்த பராசரமுனிவருக்கு, மீன் வாணிச்சி-மீன் வாணிபஞ்செய்யும் பரவமாதாகிய மச்சகந்தியினது, வயிற்றில் - வயிற்றிலே, பிறந்த-ஜனித்த, வியாசரும்-வேதவியாச முனிவ

ரும், (ஆகிய) இந்நால்வரும் - இந்நான்குபேரும், (பிறப்பால் இழிக் தவர்களாயிருந்தும் தங்கள் ஒழுக்கத்தினாலே) மேவசங்கள் ஓதி-நான்கு வேதங்களை ஓதி யுணர்ந்து, மேன்மைப்பட்டு-உயர்வடைந்து, மாதவர் ஆகி-சிறந்த தவத்தினை யுடையவர்களாகி, வயங்கினர் அன்றே - உலகத்தில் விளங்கினார்களல்லவா?

(வி - ரை.) "நான மேமேல சொல்லிய விஷயம் என் பேச்சு மாத்திரமன்று; அதற்குதாரணமாகச் சில செய்கைகள் நிகழ்ந்திருக் கின்றன: பிரமனுக்குக் கூத்தி சம்பந்தமாக வசிட்டர் தோன்றினர்; வசிட்டருக்குச் சண்டாளி வயிற்றில் சத்தியர் பிறந்தார்; சத்தியர்க்குப் புலைச்சியினிடமாகப் பராசர் தோன்றினர்; பராசர்க்குச் செம்படவப் பெண்ணினிடத்தே வேதவியாசர் பிறந்தார்; இந்நால்வரும் தங்கள் ஒழுக்கத்தினாலே சிறந்த முனிவர்களாயிருக்கவில்லையா? இதற்கு என்ன சமாதானம் கூறுவீர்?" என்பது இவ்வடிகளின் கருத்து. "பிரமபுத்திரராகிய வசிட்டர் ஒருகாலத்தில் நிமியின் சாபத்தால் தேக மில்லாதவராய் வருந்தித் தம்முடைய பிதாவாகிய நான்முகனிடத் திற் சென்று தேகம் கொடுக்கவேண்டுமென்று விண்ணப்பிக்க, அவர், 'மித்திராவருணருடைய கலப்பால் உனக்குத் தேக முண் டாம்' என்று கூறினர். அதன்மேல் வசிட்டர் வருணலோகம் சென் றனர். அப்போது அவ்வுலகத்தை ஆண்டுகொண்டிருந்த மித்திரன், வருணன் ஆகிய இருவருள்ளும் மித்திரனிடத்தே ஊர்வசி என்ப வள் செல்ல, நடுவழியில் வருணன் அவளைக் கண்டு மோகித்தழை க்க, அவள், 'நான் மித்திரனிடம் வருவதாகச் சொல்லி வாக்குக் கொடுத்திருக்கின்றேன்; ஆகையால் உயமிடம் வருதல் முடியாது' என்று சொல்லி அப்பாற் சென்றனள். அத்தருணத்தில் வருணன், 'உனக்காக என் தேஜஸில் ஒருவன் உதிக்க' என்று கூறினன். அதை அவள் ஒப்புக்கொண்டு போய்விட்டனள். அங்ஙனம ஊர்வசி மித் திரனிடம் செல்லவே அவள் வருதற்குள் அவன், தன் தேஜஸை ஒரு குடத்தில் அடைக்க அதிலிருந்து அகஸ்தியர் பிறந்தனர்.

அதன்மேல் மித்திரன் மேற்கூறியபடி சென்ற ஊர்வசியைக் கண்டு 'நீ முதலில வருணனிடம் சென்று வந்தமையால பூவுலகத்தில் புரூர வஸுக்கு பெண்டாகக்கடவாய' என்று சபித்தனன் பிறகு அவள் வருணனிடம் சென்றனள். அவன், 'நீ முந்தியே என்னிடம் வாராத தால் இப்பொழு நான் கூடேன்' என்று மறுத்தருத் தன் தேஜ ஸைக குடத்தில அடைய அதினின்றும் வசிட்டர் தேகம் பெற்று வந்தனா" எனபது புராணகதை. இங்கே வசிட்டா ஊர்வசியின் வயி ற்றில் பிறக்காவிடினும் அவள் சம்பந்தமாக வருணனுடைய தேஜஸி லிருநது தேசம் பெற்ற காரணத்தால் அவளை அவருக்குத் தாயென் றும், அவரை அவள் வயிற்றிற் பிறந்தவரென்றும் கூறினர் ஆசிரி யர். நவபிரமாககளில் ஒருவராகிய காசிபா ஊர்வசியைச் சேர்ந்து வசிட்டரைப் பெற்றுரென்று வேறொரு கதையும் புராணங்கள் கூறும்.

இந்த வசிட்டருக்குச் சத்திமுதலிய நூறுபுத்திரர்கள் அருந்ததியி னிடம் தோன்றினர்; இந்த அருந்ததி ஒருசமயம் தன் நாயகன் மீது சந்தேகம் கொண்டபடியால் கருநிறம் இயைந்த ... முன் னவளாய் யாவரும் காண நக்ஷத்திரபதம் பெறும்படி தன் நாயகனுல் சபிக்கப்பட்டவள்; இககாரணத்தினுலே பே இவளைச் சண்டாளி என்றனர். சத்தியருடைய மனைவி திரசந்தி என்பாள்; இவளைப்புக்க னூர்ப் புலைச்சி என்ப; இவள் புலைச்சியான வரலாறு புராணங்களிற் கண்டுகொள்க. பராசர் பரவராஜபுத்திரியாகிய மச்சகந்தியைக கூடி வியாசரைப் பெற்றனரென்பது பாரதகதை. வேதங்கள்: இருக்கு, தைத்திரியம், சாமம், அதர்வணம் என்னும் நான்குமாம. 'அந் நீற்க' 'இந் நால்வரும்' என்பன தனிச்சொற்கள். அன்றே என்பதி லுள்ள ஓகாரம் அறிவினுப் பொருளது.

அருந்தவ மாமுனி யாம்பக வற்குக்
கருவூர்ப் பெரும்பதிக் கட்பெரும புலைச்சி

ஆதி வயிற்றினி லன்றவ தரித்த
105 காமுனி யாகிய கபிலனும் யானே
என்னுடன் பிறந்தவ ரெத்தனை பேரெனில்
ஆண்பான் மூவர் பெண்பா னால்வர்
யாமவர் திறஞ்சிறி தியம்புவல் கேண்மின்
ஊற்றுக் காடெனு மூர்தனிற் றங்கிய
110 வண்ணா ரகத்தில் உப்பை வளர்ந்தனள்
காவிரிப்பூம் பட்டினத்திற் கள்விலைஞர் சேரியில்
சான்றா ரகந்தனில் உறுவை வளர்ந்தனள்
நரப்புக் கருவியோர் நண்ணிடு சேரியில்
பாணா ரகத்தில் ஔவை வளர்ந்தனள்
115 குறவர் கோமான் கொய்தினைப் புனஞ்சூழ்
வண்மலைச் சாரலில் வள்ளி வளர்ந்தனள்
தொண்டைமண் டலத்தில் வண்டமிழ் மயிலைப்
பறைய ரிடத்தில் வள்ளுவர் வளர்ந்தனர்
அரும்பார் சோலைச் சுரும்பார் வஞ்சி
120 அதிக னில்லிடை அதிகமான் வளர்ந்தனன்
பாரூர் நீர்நாட் டாரூர் தன்னில்
அந்தணர் வளர்க்க யானும் வளர்ந்தேன்.

(இ - ள்.) (மேற்கூறியபடி நீங்கள் முனிவர்களாகக் கொண்டாடும் அவர்கள் கதியே இவ்வாறிருக்கும்போது இதைப்பற்றிச் சிறிதும் ஆலோசியாமல் என்னுடைய பிறப்பைப்பற்றி மாத்திரம் இழிவாகக் கருதுகின்றீர்; இதற்குக் காரணந் தெரியவில்லை; அவர்களைப்போலவே) அரும்-அருமையாகிய, தவம்-தவத்தினையுடைய, மா-சிறந்த, முனியாம்-முனிவராகிய, பகவற்கு - பகவன் என்பவரிடத்தில், பெரும்பதி-பெருமை பொருந்திய நகரமாகிய, கருவூர்க்கண்-கருவூரிடத்திலே தோன்றிய, பெரும்புலைச்சி-என்னையும் என் சகோதரரையும் பெற்றதனால் பெருமை தங்கிய நீச ஸ்திரீயாகிய,

ஆதி வயிற்றினில்- ஆதி என்பவளுடைய உதரத்திலே, அன்று-அக் காலத்திலே, அவதரித்த-தோன்றிய, கான்முளையாகிய-புத்திரனாகிய, கபிலன் யானே-கபிலனென்பவன் நான்; என்னுடன் பிறந்தவர்-இன் னும் என்னோடு தோன்றியவர், எத்தனைபேரெனில்-எத்தனை பேர்க ளென்றால், ஆண்பால்-ஆண்பிள்ளைகள், மூவர் மூன்று பேராவர், பெண்பால்-பெண்பிள்ளைகள், நால்வர்-நான்குபேர்கள்; (அவர்களும் என்னைக்காட்டிலும் கல்வி கேள்வி ஒழுக்கங்களில் உலகத்திற்சிறப் புற்று விளங்குகின்றனர்; யானொருவனு பிராமணரகத்தில் வளர்ந்தேன்; அவர்களோ தாழ்ந்தவிடங்களில் வளர்ந்தனர்; அங்ஙனம்) யாம்-நாங்கள், வளர் திறம்-வளர்ந்ததன்மையை, சிறிது-கொஞ்சம், இயம்புவல்-கூறு வேன், கேண்மின் - கேட்பீராக; ஊற்றுக்காடு என்னும்-ஊற்றுக்கா டென்கின்ற, ஊர்தனில்-கிராமத்திலே, வண்ணார் அகத்தில்-வண்ணா ருடைய வீட்டிலே, தங்கி-நிலைபெற்று, உப்பை-என்னோடு பிறந்த உப்பையென்னும் பெண்பால், வளர்ந்தனள் - வளர்ந்தாள்; காவிரிப் பூம் பட்டினத்தில்-காவிரிப்பூம் பட்டினமென்னும் நகரத்திலே, கள விலைஞர்-கள்விற்பவர்கள் வாசஞ்செய்கின்ற, சேரியில் - தெருவிலே, சான்றார் அகந்தனில் - சானாருடைய வீட்டிலே, உறுவை - உறுவை யென்னும் சகோதரி, வளர்ந்தனள்-வளர்ந்தாள்; நரப்புக்கருவியோர்- வீணை முதலிய நரம்புக் கருவிகளை வாசிக்கின்றவர், நண்ணிடு சேரி யில்-பொருந்தி யிருக்கின்ற தெருவிலே, பாணர்-சங்கீதம்பாடி ஜீவிக் கின்றவருடைய, அகத்தில்-வீட்டில், ஔவை வளர்ந்தனள் ஔவை யென்னும் சகோதரி வளர்ந்தாள்; குறவர் கோமான் - வேடர் தலைவ னுடைய, கொய்-அறுக்கின்ற, தினைப்புனம் சூழ் - தினைக்கொல்லை கள் நிறைந்த, வண்மலைச்சாரலில் - வளப்பம்பொருந்திய மலையின் சாரலிலே, (அவ்வேடர் தலைவனிடத்தில்) வள்ளி வளர்ந்தனள் - வள்ளியென்னும் சகோதரி வளர்ந்தாள்; தொண்டைமண்டலத்தில்- தொண்டைமண்டலத்திலேயுள்ள, வண்தமிழ் - வளப்பம் பொருந் திய தமிழினையுடைய, மயிலை - மயிலாப்பூரென்னுந் தலத்திலே,

பறையடிகிடத்தில் - பறைச்சாதியா ரிட்த்திலே, வள்ளுவர் - வள்ளு வர் என்னும் சகோதரர், வளர்ந்தனர் - வளர்ந்தார்; அரும்பு ஆர் - பூவரும்புகள் நிறைந்த, சோலை - பொழிலில், சுரும்பு ஆர் - வண்டு கள் சஞ்சரிக்கின்ற, வஞ்சி-கருவூர், கொடுங்கோளூா என்னும் பெயர் களையுடைய தலத்திலே, அதிகன் இல்லிடை - சேரமான் இல்லத் திலே, அதிகமான் - அதிகமானென்னும் சகோதரன், வளர்ந்தனன் - வளர்ந்தான்; பார்-பூமியிலே, ஊர் - ஊர்ந்து செல்கின்ற, நீர் நாட்டு- நீர்வளம்பொருந்திய நாட்டினையுடைய, ஆரூர்தன்னில் - திருவாரூ ரென்னுந் திருப்பதியிலே, அந்தணர் வளர்க்க பிராமணர் வளர்த்துவர, யானும் வளர்ந்தேன் - நானும் வளர்ச்சியுற்றேன்; (இதனால் நாங்கள் தாழ்ந்தவ ராவோமோ? ஒருபோதும் ஆகமாட்டோம்; உலகத்தில் எல லோரும கடவுளால் ஒரே தன்மையராய்ப் படைக்கப்பட்டவர்களே.)

(வி - ரை.) "மேற்கூறியபடி வசிட்டராதி முனிவரெல்லாம் தாழ்ந்த விடத்துப் பிறந்து தங்கள் ஒழுக்கத்தால் வேதமோதிச் சிற ந்தமுனிவர்களாகமேன்மையடைந்துவந்தனர்; அவர்களை எல்லோரும் சிறந்த மகான்களெனக் கொண்டாடினரேயன்றிப் பிறப்பால்தாழ்ந்த வர்களென அவமதித்திலர்; பிராமணர்களெல்லோரும் அவர்களாற் செய்யப்பட்ட ஸ்மிருதி முதலிய நூல்களையெல்லாம் மிகக் கொண் டாடி வருகின்றனர்; அவர்களைப்போலவே யானும் என்னோடு கூடப் பிறந்தவர்களாகிய உப்பை, உறுவை, ஔவை, வள்ளி, வள்ளுவர், அதிகமான ஆகிய அறுவரும் பகவனென்னும் முனிவருக்குந் ஆதி யென்னும் புலைச்சிக்கும் பிறந்து உயர்ந்த விடங்களினும் தாழ்ந்த விடங்களினும் வளர்ந்து வந்தோம்; அங்ஙனமாயினும் கல்வி அறிவு ஒழுக்கங்களிற் சிறந்திருக்கின்றோம்; ஆதலின், எங்களை நீங்கள் தாழ்மையாகக் கருதுவதற்கு எவ்வித நியாயமுமில்லை; உலகத்தில் கடவுளாற் படைக்கப்பட்ட எல்லோரும் ஒருதன்மையுடையவர்க ளே" என்பது இவ்வடிகளின் கருத்து.

பகவர்: அகஸ்தியர்க்குச் சமுத்திர கன்னியிடம் பிறந்த பெருஞ் சாகரரென்பவருக்குத் திருவாரூர்ப் புலைச்சியிடம் பிறந்து முனிவரானவர்

ஆதி: பகவமுனிவருக்கு அருள்மங்கையென்னும் பிராமணமாதிடத்திற் பிறந்து, உறையூர்ப் பெரும்பறையனால் கண்டெடுத்து வளர்க்கப்பட்டுத் தானிருந்த சேரியில் மண்மாரி பெய்ய எல்லோரு மழிந்ததனால் தானமாத்திரம் வெளியேறி அதற்கடுத்த மேலூர் அகரத்திலே நீதியையன் வீட்டில் வளர்ந்தவள். இவள் கருவூர் ஆதியென்றதற்குக் காரணம், முன்னே கருவூரிற் பிறந்தவளா யிருக்கவேண்டும், அல்லது அதிகமானைக் கருவூரிலிருந்து பெற்றதா யிருக்கவேண்டும். புலையனால் வளர்க்கப்பட்ட காரணத்தைக்கொண்டு இவள் புலைச்சி யெனப்பட்டாள்.

இவள் அங்ஙனம் வளர்ந்துவருங்காலத்தில், பகவர் என்பவர், யாவருங் கொண்டாடும்படி பிராமண நிருத்தியத்தை மேற்கொண்டு ஒருசமயம் தீர்த்தயாத்திரை செய்யப் புறப்பட்டுக் காசிக்குச்செல்லும் போது ஆதி வளர்ந்த அகரத்துக் கடுத்த ஒரு சத்திரத்தி லிறங்கி நித்திய கருமங்களை முடித்துக்கொண்டு சமயல் செய்தனர்; அப்போது ஆதியென்பவள் சிறுபருவமுடையளாய் அங்கே வந்தனள். அவளைக் கண்டமாத்திரத்தில் பகவர் அவள்மீது அருவருப்புக்கொண்டு, 'நீ யார்? புலைச்சியோ வலைச்சியோ? இங்கே ஏன் வந்தாய்?' என்று கோபத்தோடதட்டிச் சட்டுவைத்தால் அவள் தலையிலே காயமுண்டாகும்படி அடித்து அவளைத் துரத்தினர். அவள் அழுதுகொண்டு தன்னிடத்துக்குப் போய்விட்டாள். பின்னர், பகவர் அவ்விடத்தி னின்றும் புறப்பட்டுக் காசிக்குப்போய்க் கங்கா ஸ்நானஞ் செய்து பிரயாகையிலிருந்து தீர்த்தக்காவடி கட்டிக்கொண்டு திரும்பிவந்து மீண்டும் அந்த ஆதியிருந்த அகரத்திலுள்ள சத்திரத்தில் தங்கினர். அப்போது முன்னே அவரிடம் சட்டுவத்தா லடிபட்டுச் சென்ற ஆதி

யென்பவள் தன் மண்டையிற் பட்ட காயம் மாறித் தழும்பிருக்க, மங்கைப்பருவத்தை யடைந்து அங்கே வந்தாள். பகவர் என்பவர் அவளைப் பார்த்தமாத்திரத்தில் முன்னே தம்மிடம் அடிவாங்கிச் சென்றவளென் றுணராது அவள்மீது ஆசைகொண்டார். அத்தருணத்தில் அவளை வளர்த்த நீதியைய ரென்பவர் அச்சத்திரத்துக்குத் தலைவரா யிருந்தபடியால், பகவர் எண்ணத்தை யுணர்ந்து, 'இந்தப் பெண்ணை விவாகஞ் செய்துகொண்டு இவ்விடத்திலேயே இரும்' என்று அவரிடம் சொன்னார். அதற்குப் பகவர், 'நான் தீர்த்தக் காவடியை இராமேச்சுரத்திற் செலுத்திவந்து அப்படியே செய்கிறேன்' என்று சொல்லி அவ்வையரிடம் விடைபெற்றுச் சென்று அங்ஙனமே செய்து திரும்பிவந்தனர். அப்போது நீதியையர் ஆதியை, பகவர் என்பவர்க்கு விவாகஞ் செய்து கொடுத்தனர். விவாகம் முடிந்து ஐந்தாநாள் மங்கள ஸ்நானஞ் செய்யும்போது பகவர் அந்தப் பெண்ணின் தலையில் எண்ணெ யிடவகற்றக் கூந்தலை விலக்கினர்; அப்போது தாம் முந்திச சட்டுவத்தா லடித்ததனு லேற்பட்ட வடுவைக் கண்டு சந்தேகித்து அவளுடைய விருத்தாந்தத்தை விவரித்துணர்ந்து விசனித்து, அவளை நோக்கி, 'நீ ஆதியளல்லவோ' என்று சொல்லி அவளை விட்டோடினார். அதனாலேயே அவளுக்கு ஆதியென்று பெயருண்டாயிற்று.

மேற்கூறியபடி ஓடிய பகவர் பொழுது போனவுடன் எதிர்ப்பட்ட ஒரு பாணர் சேரியிலிருந்த மண்டபத்தில் தங்கினர். அப்போது ஆதியும் அவரை விடாமல் தொடர்ந்து சென்று அவரிடம் சேர்ந்து, 'தெய்வச செயலால் உமக்கும் எனக்கும் விவாகசம்பந்தம் நடந்திருக்க, நீர் என்னைவிட் டோடுதல் தகாது,' என்று சொல்ல, அவர், இரக்கமுற்று அவளை நோக்கி, 'பெண்ணே! அப்படியானால் உன்னைச் சேர்த்துக்கொள்கிறேன்; நீ, நான் சொல்கிறபடி செய்யவேண்டும்; அஃதியாதென்றால், உனக்கு எங்கெந்த விடத்திற் பிள்ளைகள் பிறக்கின்றனவோ அந்தந்த விடத்தில் அப்பிள்ளைகளைப் போட்டு

வரவேண்டும்; அப்படிச் செய்வதாயிருந்தால்மட்டுந்தான் நான் உன்னைக் கூடுவேன்' என்றார். அதற்கவள் உடன்பட்டாள். அன்றிரவு அவ்விருவரும் அம் மண்டபத்திற் கூடினார்கள்; உடனே ஔவை பிறந்தனள்; அவளை விட்டு நீங்கிச்செல்ல ஆதி வருந்தினள்; அப்போது ஔவை, 'இட்டமுட னென்றலையில் . ...' என்ற வெண்பாவைப் பாடி அவளைத் தேற்றினள்; அதைக் கேட்டு ஆதி அவளைவிட்டு, பகவருடன் போயினள். பின்பு அச்சேரியிலிருந்த பாணர்கள் ஔவையையெடுத்து வளர்க்க அவள் வளர்ந்து கலை முழுதும் ஓதாதுணர்ந்து உலகத்திற்குப் பிரயோசனமாகிய பல நூல்களைச் செய்து கீர்த்தியடைந்தனள்.

பின்னர் பகவரும் ஆதியும் தொண்டைநாட்டிலுள்ள ஊற்றுக்காடென்னு மூரின் மண்டபத்திற் சென்று ஓரிரவு கூடியிருந்தார்கள்; அப்போது உப்பை யென்பவள் பிறந்தாள்; அப்போது அக்குழந்தையைப் பிரிந்து செல்லுதற்கு ஆதி வருந்த, உப்பை, "அத்தி முதலெறும்பீறான," என்ற வெண்பாவைப் பாடி அவளைத் தேற்றினள். அதன்மேல் ஆதியும் பகவரும் அவ்விடத்தைவிட்டுச் சென்றார்கள். அதன்மேல் அவ்வுப்பை யென்பவள் அவ்வூரிலுள்ள வண்ணரால் வளர்க்கப்பட்டு மாரியம்மை யாயினள்.

அதன்மேல், ஆதியும் பகவரும் சோழதேசத்திற் கருவூரிலுள்ள ஒரு சோலையிற் றங்கினர். அங்கே அதிகமானென்பவர் பிறந்தார். ஆதி அவரைவிட்டுச் செல்லவருந்தி, அவர், "கருப்பைக்கு முட்டைக்கும்," என்ற வெண்பாவைப் பாடித் தேற்றத் தேறி பகவருடன் சென்றனள். அதன்மேல் அவ்வதிகமான், சேரமானால் வளர்க்கப்பட்டு மன்னராய்ச் சொக்கநாதர் திருமுகத்தைப் பார்த்து பாணபத்திரருக்கு வேண்டிய திரவியங்கொடுத்து, பொன்வண்ணத்தந்தாதி பாடிச் சிதம்பரத்தி லரங்கேற்றிச் சுந்தரமூர்த்தி நாயனார் நட்புப்பெற்று அவருடன் கைலைக்குச் சென்று தாம் பாடிய ஆதியுலாவை அங்கே அரங்கேற்றிச் சிவானுக்கிரகம் பெற்றனர்.

பின்னர் ஆதியும் பகவரும் காவிரிப்பூம் பட்டினத்திற் சேர்ந்து ஓர் மண்டபத்திற் கூட உறுவையை பிறந்தாள். அப்போது ஆதி அக் குழந்தையைப் பிரிதற்கு வருந்தி அவள், "சண்டைப்பைக்குள்ளுயிர்" என்ற வெண்பாவைப் பாடித் தேற்றத் தேறிப் பகவருடன் போயி னள். அதன்மேல் இவ்வுறுவையை சான்றோரால் வளர்க்கப்பட்டு வளர்ந்து தவஞ்செய்து காளியாய்த் தாருகனைக் கொன்று, திருவாலங்காட்டில் சபாநாயகருடன் நிருத்தஞ் செய்து தோற்று அகோர வீரபத்திரரை மணம்புரிந் தவவிடத் திருந்தனள்.

பின்னர் ஆதியும் பகவரும் திருவாரூர் சேர்ந்து ஒரு மண்ட பத்திற் கூட, இந்நூலாசிரியராகிய கபிலர் பிறந்து, தாய் பிரிந்து செல்ல வருந்தியபோது, "கண்ணுழையா...," என்ற வெண்பாவைப் பாடித் தேற்ற அவ்விருவரும் அப்பாற் சென்றனர். அதன்மேல் கபிலர், பாப்பையன் என்னும் அந்தணனால் வளர்க்கப்பட்டு, தமக்கு உபநய னஞ் செய்யத் தொடங்குகையில் பிராமணர்கள் அதைத் தடை செய்த தால, அவர்களுக்கு இந்த அகவலைச் சொல்லி கர்மத்தால் ஜாதியே யன்றி ஜென்மத்தால் ஜாதியில்லை யென்பதை ஸ்தாபித்து, அச் சடங்கு முடிக்கப்பெற்றுத் தவத்திற் சிறந்தவ ராயினர்; இவர், இப் பொழுதும் பாதாள வுலகத்தில் தவம் பண்ணிக்கொண் டிருப்பதாகக் கூறுப.

பின்னர், ஆதியும் பகவரும் வேளின் மலைச்சாரலில் கூட அங்கே வள்ளி பிறந்தனள். அப்போதும் ஆதி அக் குழந்தையைப் பிரிதற்கு வருந்த, அப் பெண்குழந்தை, "அன்னைவயிற்றி..." என்கிற வெண் பாவைப் பாடித் தேற்றப் பிரிந்து பகவருடன் சென்றனள். அதன் மேல் இவ்வள்ளி வேடரால் வளர்க்கப்பட்டுக் குமாரக்கடவுளை மணந் தனளென்ப; இவள் கதை கந்தப்புராணத்தில் வேறு வகையாகக் கூறப்படும். இவ்வாறே இவர்களுள் இன்னும் சிலர் சரித்திரங்களும் மாறுபடும். இது, சரித்திரம் எழுதினவர்களால் நேர்ந்த தோஷமாம்.

அதன்மேல் ஆதியும் பகவரும் மயிலாப்பூரிலுள்ள இலுப்பைத் தோப்பிற் சென்றுகூடத் திருவள்ளுவர் பிறந்தனர். அவரையும் விட்டுச் செல்ல ஆதி வருந்தினள். அப்போதவர், "எவ்வுயிருங் காக்க," என்னும் வெண்பாவைப் பாடி அவளைத் தேற்றினர். பின்னர் அவ்விருவரும் தீர்த்த யாத்திரைக்குப் போய்விட்டனர். வள்ளுவரை ஒரு வேளாளன் எடுத்து வளர்த்தாத் தம்மினத்தவர் நிந்தை செய்ததால் வெளித் திண்ணையிற் கிடத்தித் தம் பண்ணைக்காரரால் வளர்ப்பித்தனன். பின்னர் வள்ளுவர் மகா மகிமை யடையராய்த் திருக்குறள் பாடி மதுரைச் சங்கத்தில் அரங்கேற்றிப் பல அற்புதங்களைச் செய்து நற்பதவி யடைந்தனர். இன்னும் இவர் சரித்திர விரிவு [illegible] வள்ளுவர் சரித்திரம் முதலியவற்றுள் லுணர்க. இவர்களுடைய [illegible] ங்கள் பலவிதமாக மாறுபட்டிருப்பினும், இந்நூல் கபிலரா[illegible] சொல்லப்பட்டதாதலால், இதற்குக் கூறப்படும் ஆறுபேரு[illegible] வர்கள் இவருடன் பிறந்தன ரென்பதும், மேற்கூறிய விட[illegible] வளர்ந்தன ரென்பதும் உண்மையென்றே கொள்ளப்படும்.

கள்விலைஞர்-கள்ளை விலைக்கு விற்று ஜீவிப்பவர்; இது [illegible]றல் என்னுந் தொழிலடியாக வந்த பெயர்; விலை - பகுதி, அர் - விகு[illegible] ஞ் - பெயரிடைநிலை. சேரி - குடிகள் சேர்ந்திருப்பது. நரம்புக கரு[illegible] யென்பது நரப்புக் கருவியென வலித்தல் விகாரம் பெற்றது; [illegible] புக்கருவி-நரம்பா லாக்கப்பட்ட வீணை முதலியன; இக் கருவிகளால் சங்கீதம் பாடுவோர், நரம்புக்கருவியோர் எனப்படுவர். பாணர் - பாட்டுப்பாடுவோர்; பாண்-பாட்டு. குறவர்-குறிசொல்வோர்; குறம்-குறி; குறவர், வெறியாட்டயர்ந்து வருங்காரியம் முதலியன சொல்லுதல் அவர் ஜாதித் தொழில்களில் முக்கிய தொழில். பறையர்-பறையென்னும் வாத்தியத்தை முழக்குவோர். வஞ்சி - சேரராஜாக்களின் இராஜதானிப் பட்டிணம்; இது கொச்சிக் கருகில் உள்ளது; இதற்கு, கருவூர் என்றும், கொடுங்கோளூர் என்றும் மறு[illegible] பெயர்களுண்

இதில் ஒரு காலத்தில் சோழராஜரும் அரசாண்டனர். அதிகமான்-ஒருவகை வீரர்பாற்பட்ட அதியர் குடியினர்.

ஆதலால்,
மாரிதான் சிலரை வரைந்து பெய்யுமோ
125 காற்றுஞ் சிலரை நீக்கி வீசுமோ
மாநிலஞ் சுமக்க மாட்டே னென்னுமோ
கதிரோன் சிலரைக் காயே னென்னுமோ
வாழ்நான்கு சாதிக் குணவு நாட்டிலும்
கீழ்நான்கு சாதிக் குணவுகாட் டிலுமோ
130 இருமையும் வறுமையுஞ் செய்தவப் பேறும்
சாவதும் வேறிலை தரணி யோர்க்கே
குலமு மொன்றே குடியு மொன்றே
இறப்பு மொன்றே பிறப்பு மொன்றே
வழிபடு தெய்வமு மொன்றே யாதலால்
135 முன்னோ ருரைத்த மொழிதவ றுமல்
எந்நா ளாயினு மிரப்பவர்க் கிட்டுப்
புலையுங் கொலையுங் களவுந் தவிர்ந்து
நிலைபெற வறத்தி னிற்பவை யறிந்து
ஆணும் பெண்ணு மல்லதை யுணர்ந்து
140 பேணி யுரைப்பது பிழையெனப் படாது
சிறப்புஞ் சீலமு மல்லது
பிறப்பு நலந்தருமோ பேதை யீரே.

(இ-ள்.) ஆதலால் - மேற்கூறியபடி மனிதரெல்லோரும் ஒரே தன்மையுடையவரா யிருக்கின்றனை ராகையினாலே, மாரி - மேகமானது, சிலரை வரைந்து-சிலபேரை அளவிட்டு, (அதாவது இவர் உயர்ந்தவரென்றும் தாழ்ந்தவரென்றும்) பெய்யுமோ-(உயர்ந்தார்க்கு அதிகமாகவும் தாழ்ந்தவர்க்குக் குறைவாகவும் மழையைச்)சொரியுமோ (அவ்வாறு பெய்யாது எல்லோருக்கும் சமமாகவே பெய்யும்); காற்

றும்-வாயுவும், சிலரை-சிலமனிதர்களை, நீக்கி - தாழ்ந்தவர்களென்று விலக்கி, வீசுமோ-வீசுதல் செய்யுமோ (இல்லை); மா நிலம்-பெருமை தங்கிய இந்தப்பூமியானது, (சிலரைத் தாழ்ந்தவர்களென்று) சுமக்க மாட்டேன் என்னுமோ - தாங்கமாட்டேனென்று சொல்லி விலக்கி விடுமோ (இல்லை); கதிரோன் - சூரியன், சிலரை-சில மனிதரைத் (தாழ்ந்தவர்களென்றெண்ணி), காயேன் என்னுமோ - சுட்டுக் குளிரை நீக்கி அவர்களுக்கு இதத்தைச் செய்யமாட்டேனென்று சொல்லுவானோ (இல்லை); வாழ்-செல்வத்துடன் வாழ்கின்ற, நான்கு சாதிக்கு - நால்வகை ஜாதியார்களுக்கு, உணவு - ஆகாரமானது, நாட்டிலும் - நாடுகளிலும், கீழ் - வறுமைப்பட்டுத் தாழ்மையாகின்ற, நான்கு ஜாதிக்கு - நால்வகை ஜாதியாருக்கு, உணவு - ஆகாரமானது, காட்டிலுமோ - வனத்திலும் ஏற்பட்டிருக்கின்றனவோ? திருவும்-செல்வமும், வறுமையும் - தரித்திரமும், செய் - செய்கின்ற, தவப்பேறும் - தவப்பயனும், சாவதும் - மரணமடைவதும், தரணியோர்க்கு - இப்பூமியில் உள்ளவர்க்கு, வேறு இல்லை - வெவ்வேறு விதமாக இல்லை (எல்லாம் ஒரு விதமாயிருக்கின்றன); இன்னும் அவருக்கு) குலமும் ஒன்று - ஜாதியும் ஒன்றே; குடியும் ஒன்று - குடிப்பிறப்பும் ஒன்றேயாம்; இறப்பும் ஒன்று - மரணமும் ஒரே விதமானது; பிறப்பும் ஒன்று-தோற்றமும் ஒரு விதமானதே; வழிபடு - வணங்குகின்ற, தெய்வமும் ஒன்றே - கடவுளும் ஒருவனே; ஆதலால்-ஆகையினாலே, முன்னோர் உரைத்த-முன்னோர்கள் கூறிய, மொழி தவறாமல் - நீதி வார்த்தையினின்றும் பிசகாமல், எந்நாள் ஆயினும் - எந்த நாளாயிருந்தாலும், இரப்பவர்க்கு - யாசிப்பவருக்கு, இட்டு - இயன்றதைக் கொடுத்து, புலையும் - புலால் தின்னுதலாகிய புலைத்தொழிலையும், கொலையும் - ஜீவன்களை வதைப்பதாகிய சொல்லுதற்கொழிலையும், களவும்-திருட்டையும், தவிர்ந்து - விட்டு நீங்கி, அறத்தின் - தருமமார்க்கத்திலே, நிலைபெற - உறுதியாக, நிற்பதை அறிந்து - நிற்கும் தன்மையை யுணர்ந்து, ஆணும் பெண்ணும்

அல்லதை - ஆணும் பெண்ணும் அல்லாததாகிய உண்மைப் பொருளின் சொரூபத்தை, உணர்ந்து - அறிந்து, பேணி - விரும்பி, உரைப்பது - சொல்லும் உண்மை மார்க்கமானது, பிழையெனப் படாது - குற்றம் என்று எவராலும் சொல்லப்படமாட்டாது (உயர்வாகவே கொண்டாடப்படும்); பேதையீரோ-ஜாதிபேதம் பாராட்டும் பேதைமையுடைய வேதியர்களே! (நீங்கள் உங்களை உயர்ந்தவர்களாகக் கருதினும் பிறப்பால் மேம்பட்டவராகமாட்டீர், மனிதர்க்கு) சிறப்பும் - தவத்தினால் ஏற்படும் மகிமையும், சீலமும் - ஒழுக்கமும், அல்லது - அல்லாமல், பிறப்பு - பிறப்பானது, நலம் தருமோ-நன்மையைக் கொடுக்குமோ (ஒருபோதும் கொடாது; சிறப்பும் சீலமுமே நன்மை பயப்பனவாம்; நான் சொல்லிய இவற்றையெல்லாம் உணர்ந்து இனியேனும் அஞ்ஞானத்தை ஒழிப்பீராக).

(வி-ரை.) "பேதைமையுடையவர்களே! முன்னே கூறியபடி எல்லோரும் ஒரே தன்மையராயிருக்கின்றமையாதலின் உலகத்தில் மனிதர்க்கு வேண்டிய காரியங்களெல்லாம் பொதுவாக ஒரே தன்மையனவாய் நடைபெறுகின்றன; மழை, சிலர்க்குமாத்திரம் பெய்து சிலருக்குப்பெய்யாமலிருக்கிறதில்லை; காற்று சிற்சிலருக்கு வீசி, சிலருக்கு வீசாமல் இருப்பதில்லை; பூமியானது சிலரைத்தாங்கிச் சிலரைத் தாங்காமலிருப்பதில்லை; சூரியன் தன்னுடையகிரணங்களைச் சிலருக்குவீசி சிலருக்கு வீசாம லிருப்பதில்லை; செல்வமுடையவர்களுக்கு உணவு காட்டிலும் வறுமையுடையவருக்கு உணவு காட்டிலும ஏற்படவில்லை; எல்லோரும் அவரவர் இருக்குமிடங்களில் மனிதர்க்கு ஏற்பட்ட உணவுகளையே உண்டுவருகின்றனர்; செல்வமும், வறுமையும், தவப்பேறும், மரணமும் மனிதர்க்கு ஒரே தன்மையனவாம். இன்னும் மானிடர்க்கு: குலம், குடி, மரணம், பிறப்பு முதலியனவும் ஒரே தன்மையுடையனவாம்; தெய்வமும் ஒன்றே. ஆதலால், முன்னோர் கூறிய நீதிகளினின்றும் தவறாமல் எக்காலத்திலும் யாசிப்பவருக்குத் தானங்கொடுத்து; புலை, கொலை, களவு முதலிய கெட்ட தொழில்களை

நீக்கி, அறத்தின் வழி நிற்பதை யுணர்ந்து ஒரே தன்மைத்தான தெய்வத்தை இன்னதெனத் தெளிந்து, விரும்பி நான் கூறும் இந்த உண்மை மார்க்கமானது குற்றமுடையதாகாது; நீங்கள் உங்களைப் பிறப்பில் உயர்ந்தவர்களெனக் கருதியிருக்கின்றீர்கள்; உங்கள் எண்ணம் தவறானதாகும்; மனிதர்க்குத் தவமகிமையும் நல்லொழுக்கமும் மேன்மை தருமேயல்லாமல் பிறப்பு நலந்தராது; இனியேனும் நான் கூறிய உண்மை மார்க்கத்தை யுணர்ந்து உங்கள் பேதைமையான எண்ணத்தை விடுப்பீராக; என்னைத் தாழ்ந்தவனெனக் கருதுவதையும் ஒழிப்பீராக," என்பது இவ்வடிகளின் கருத்து.

ஆதலால், என்பது தனிச்சொல். வரைதல்-நீக்குதல். "மழையானது உலகத்தில் நல்லோர் தீயோர், நல்லன கெட்டன ஆகிய எல்லாவிடத்திலும் சமமாகவே பெய்யும்; காற்றும் அங்ஙனமே எல்லோர்கதும் ஒரே தன்மையுடையதாய் வீசும்; பூமி யாவரையும் தள்ளாமல் தாங்கும்; சூரியனும் அங்ஙனமே எல்லோரிடத்திலும் பிரகாசிப்பான்," எனவே, அறிவுடையோர், இவற்றைப்போலவே மனிதரிடத்தில் பேதம் பாராட்டாரென்பது இதன்மூலம் பெறப்படும். இங்ஙனம் மழை முதலியன பேதங் குறியாது உலகத்தைக் காக்கின்றன வென்பதை, "வானின் றுலகம் வழங்கி வருதலாற், றானமிழ்த மென்றுணரற் பாற்று," "நீரின் றமையா துலகெனின் யார்யார்க்கும், வானின் றமையா தொழுக்கு," "அகழ்வாரைத் தாங்கு நிலம்போலத் தம்மை, யிகழ்வார்ப் பொறுத்த றலை," என்னுந் திருக்குறள்களானும், "மலர்தலை யுலகின் மல்கிருளகல, இலகொளி பரப்பி யாவையும் விளக்கும், பரிதியி னொருதாஙகி," என்ற நன்னூற் பாயிரச் சூத்திரவடிகளானும் உணர்க. காய்தல் - கிரணத்தை வீசுதல். ஒரூரில் இருக்கின்ற மனிதரில், செல்வமுடையவர் நாட்டிலிருந் துயர்வான உணவை உண்பார்கள், வறுமையாளர் காட்டிற் சென்று தாழ்ந்த வுணவை யுண்பார்களென்னும் பாகுபாடில்லை. எல்லோரும் ஓரிடத்திலிருந்தே தங்கள் தங்களுக் கேற்பட்ட வுணவையே உண்

பார்கள்; ஆகாரவர்க்கங்கள் பலவிதமாயினும் உணவு என்னுந் தன்மையில் ஒன்றேயாம். செல்வம் பலரிடத்தும் பலவகையாக எற்படினும் ஐசுவரியம் என்னுந் தன்மையில் ஒன்றே; வறுமை பலமார்கதத்தால் வரினும் குணததில் ஒரு தன்மைத்தே. தவப்பேறு, சாவு முதலியனவும் இவைபோன்றனவே. மனிதர், நடை யுடை பாவனை யாசாராதிகளில் ஒருதன்மையுடையவர்களா யிருத்தலினாலே அவர்களுடைய குலம் குடி முதலியனவும் ஒருதன்மையனவாய் அவர்கதுப் பிறப்பிறப்பும் ஒரு தன்மையன வென்பதூஉம் வெளிப்படை. எல்லோர்க்கும் செல்வம் ஒன்றே யென்பது அறிஞர் பலருமுணர்வர். கடவுளுகை நற்பட்ட ஏகன் என்னும் நாமமே இதனை விளக்கும். கஷ்டம் வந்த காலத்தும் ஈவது சகலாகாது என்பதை விளக்குதற்கு, 'எந்நா ளாயினு மிரப்பவர்க் கிட்டு' என்றார் ஆசிரியர். பெய்யுமோ, வீசுமோ முதலியவற்றிலுள்ள ஓகாரங்கள எதிர்மறைப் பொருளன. புலை-புலாலுண்டல்.

இந்நூலின் சுருங்கிய கருத்தாவது:— "உலகத்துயிர்களே! நான்முகன் சிருஷ்டியாகிய இவ்வுலகத்தில் பெரியது இன்னது சிறியது இன்னது என்பதையும், நன்மையின்னது தீமையின்னது என்பதையும், இயற்கையின்னது செயற்கையின்னது என்பதையும், மனிதரின் இறப்பு பிறப்பின் விவரங்களையும், தேகதத்துவங்களின் இயல்களையும், மனிதரின் ஆயுட்டன்மையையும், நிலைத்தது இன்னது நிலையாதது இன்னது என்பதையும், உணரமாட்டீர்கள்; மனிதர் ஆயுளோ சொற்பம்; அதற்குள் விரைந்து அறத்தைச் செய்யவேண்டும்; அங்ஙனம் செய்யாமல் பின்னே செய்வோமென்று நினைப்பீராகில் கூற்றுவன் எந்தச் சமயத்திலேனும் உங்கள் உயிரைக் கொண்டு போய்விடுவான்; இன்னும் நீங்கள் உங்களின் இயல்பையே இன்னதென் றுணராதிருக்கின்றீர்கள்; ஒருவர் இறந்தால் உங்களிற் சிலர் உயிர்போய்விட்டதாகக் கருதி யழுகின்றனர்; சிலர் தேகமழிந்து விட்டதாகக் கருதி யழுகின்றனர்; உடலுயிர்களி னியற்கை உங்களுக்குத்

சிறிதும் புலப்படவில்லை; இங்ஙனம் உடம்பையோ உயிரையோ அழிந்துவிட்டதாகக் கருதும் ஜனங்களில் பிராமணராயிருப்பவர்கள், நிச்சயமாகச் சிற்சில வடிவங்களை உணர்ந்தவர்கள்போலவும், இறந்துபோன பிதுர்க்களையும் மற்றவர்களையும் பார்ப்பவர்கள் போலவும் கருதி, இறந்தவர்களைப் பாவனையாக இருத்தி அவிப்பாகம் முதலியன கொடுத்துப் பிதுர்க்கடன் ஆற்றுகின்றனர்; அந்தப் பிதுர்க்கள் நேரில் வந்து அந்த பூஜையை ஏற்றதையாவது, உணவை வாங்கி யுண்டதையாவது எவருமறியார்; இன்னும் பிராமணர்கள், பண்டைக் காலந்தொட்டே உண்டானதுபோல ஜாதிவகைகளை யுண்டாக்கி அவ் வகுப்புக்களுள் தங்களை உயர்ந்தவர்களெனக் கருதுகின்றனர்கள்; இது பேதைமையாகும்; இவ் விந்திய நாட்டைத் தவிர மற்றைய தேசங்களில் எந்தப் பிராமணரிருக்கின்றார்கள்? அவ் விடங்களெல்லாம் பார்ப்பாரைக் கொண்டுதானா சிறப்படைகின்றன? உலகத்தில் மனிதர், ஆடு, மாடு, எருமை, புலி, கரடி, கருடன், காக்கை, நாகம், மச்சம், நண்டு என்கிற வகைகளில் பேதமேயன்றி, இவற்றுள் ஒரு வகுப்புக்குள் பல்வேறு பேதங்களில்லை; ஒவ்வொரு வகுப்பிலும் ஒழுக்கத்தாலேயே உயர்வுண்டாகும்; மனிதருள் ஒழுக்கத்திற் சிறந்தவர்களே பிராமணராவர்; பிறப்பால் உயர்வு தாழ்வு ஏற்படாது; உயர்ந்தார்க்கு உயர்ந்தவரே உதிப்பர், தாழ்ந்தார்க்குத் தாழ்ந்தவரே தோன்றுவர்; இதை யுணராமல் நான் நீச ஸ்திரீக்குப் பிறந்தவனென்று நீங்கள் என்னை அவமதிக்கின்றீர்; என் தாய் தாழ்ந்தவளாயினும் தந்தை ஒழுக்கத்தில் உயர்ந்தவர்; அதனால் நானும் என் தந்தை யியல்பைப் பெற்று உயர்ந்தவனே யாவன்; ஒழுக்கந் தவறுவதால் பிராமணனும் பறையனாய்விடுவான், பறையனும் நல்லொழுக்கத்தாற் பிராமணனாய்விடுவான்; நான் ஒழுக்கந் தவறியவனாயிருந்தால் மாத்திரம் நீங்கள் என்னை இழிவாகக் கருதலாம்; அங்ஙனமின்றி நான் நற்குணங்களைப் பெற்றவனாயிருத்தலினாலே என்னை நீங்கள் அவமதித்தற்கு எவ்வித நியாயமுமில்லை;

இன்னும், என்னைப்போலவே வசிஷ்டர் முதலிய ரிஷிகளெல்லோரும் தாழ்ந்த விடங்களி லுதித்து மொழுக்கத்தரா லுயர்ந்திருக்கின்றனர்; அவர்களைப்போலவே நானும், என் உடன்பிறந்தவர்களும் தோன்றி மேன்மை யடைந்திருக்கின்றோம்; ஆதலின், நீங்கள் என்னை இழிவாகக் கருத வேண்டாம்; மாரிமுதலியன எல்லோரையும் சமத்துவமாகவே பாவித்து மனிதர்க்கு உபகாரஞ் செய்கின்றன; மனிதரெல்லோரும் ஒரே விதமான உணவை உண்கிறார்கள்; ஒரேவிதமான இன்ப துன்பங்களை யனுபவிக்கின்றார்கள்; எல்லோருக்கும் கடவுள் ஒருவரே ஏற்பட்டிருக்கின்றனர்; இவற்றையெல்லாம் நன்றாக ஆராய்ந்தாயின் ஜாதி பேதம் என்பது ஏற்படாது; மனிதரெல்லோரும் ஒரே தாய் வயிற்றுப் பிள்ளைகளைப்போன்ற ஒரு தன்மைத்தான இயல்பினை யுடையவரென்பது வெளியிற் புலப்படும்; பேதங்களெல்லாம் அஞ்ஞானத்தா லேற்படுவனவேயாம்; ஆகலின், இந்த அஞ்ஞானத்தை யொழித்து மனிதரனைவரையும் சகோதரரெனக் கருதுங்கள்; இரப்பவர்க்கு வேண்டியவற்றைக் கொடுங்கள்; புலை கொலை களவு முதலிய சாகசக்கிரியைகளை யடியோ டொழியுங்கள்; பெரியோருரைக்கு முண்மையாகமங்களை யுணர்ந்து அறத்தின் வழி நில்லுங்கள்; நீங்கள் முத்தியடையு மார்க்கத்தைத் தேடுங்கள்; எப்போதும் ஒரே தன்மைத்தான ஏகவஸ்துவாங் கடவுளின் சொரூபத்தை யுணர்ந்துய்யுங்கள்; இவ்விதம் நடக்குங்காலேயே நன்மையுண்டாகும்; பிறப்புப் பேதங்கருதி அஞ்ஞானத்தில் மூழ்குவதால் எப்பொழுதும் உங்களைப் பற்றி நிற்கும் அந்தகாரம் நீங்காது" என்பதாம்.

கபிலரகவல் மூலமும் உரையும்

முற்றுப்பெற்றன.

கடவுள் துணை.

# கபிலரகவல் மூலம்.

## இணைக்குற ளாசிரியப்பா.

1 நான்முகன் படைத்த நானாவகை யுலகில்
ஆன்ற சிறப்பி னரும்பொருள் கூறுங்கால்
ஆண்முதித்தோ பெண்முதித்தோ வன்றியலி முதித்தோ
நாண்முதித்தோ கோண்முதித்தோ நல்வினை முதித்தோ
தீவினை முதித்தோ
5 செல்வஞ் சிறப்போ வறிவு சிறப்போ
தொல்லை ஞாலந் தோற்றமோ படைப்போ
எல்லாப் பிறப்பு மியற்கையோ செயற்கையோ
காலத்தாற் சாவதோ பொய்ச்சாவு சாவதோ
நஞ்சுறு தீவினை துஞ்சுமோ துஞ்சாதோ
10 துஞ்சும்போ தந்தப் பஞ்சேந் திரியம்
என்செயா நிற்குமோ வெவ்விடத் தேகுமோ
ஆற்ற லுடையீ ரருந்தவம் புரிந்தால்
வேற்றுடம் பாகுமோ தம்முடம் பாகுமோ
உண்டியை யுண்குவ துடலோ வுயிரோ
15 உலகத் தீரே யுலகத் தீரே
நாக்கடிப் பாக வாய்ப்பறை யறைந்து
சாற்றக் கேண்மின் சாற்றக் கேண்மின்
மனிதர்க்கு வயது நூறல்ல தில்லை
ஐம்ப திரவி லகலுந் துயிலினால்

20 ஒட்டிய விளமையா லோரைந்து நீங்கும்
ஆக்கை யிளமையி லைம்மூன்று நீங்கும்
நாற்பது போகநீக் கிருப்பன முப்பதே
அவற்றுள்,
இன்புறு நாளும் சிலவே யதாஅன்று
25 துன்புறு நாளும் சிலவே யாதலால்
பெருக்கா றொத்தது செல்வம் பெருக்காற்
றிடிகரை யொத்த திளமை யிடிகரை
வாழ்மர மொத்தது வாழ்நா ளாதலால்
ஒன்றே செய்யவும் வேண்டு மொன்றும்
30 நன்றே செய்யவும் வேண்டு நன்றும்
இன்றே செய்யவும் வேண்டு மின்றும்
இன்னே செய்யவும் வேண்டு மின்னும்
நாளை நாளை யென்பீ ராகில்
நமனுடை முறைநா ளாவது மறியீர்
35 நம்முடை முறைநா ளாவது மறியீர்
எப்போ தாயினுங் கூற்றுவன் வருவான்
அப்போ தந்தக் கூற்றுவன் றன்னைப்
போற்றவும் போகான் பொருளொடும் போகான்
சாற்றவும் போகான் றமரொடும் போகான்
40 நல்லா ரென்னா னல்குர வறியான்
தீயா ரென்னான் செல்வரென் றுண்ணான்
தவியா தொருகணந் தறுக ணாளன்
உயிர்கொடு போவா னுடல்கொடு போகான்
ஏதுக் கழுவீர் ஏழை மாந்தர்காள்

70 அவ்விரு சாதியி லாண்பெண் மாறிக்
கலந்து கருப்பொருள் கண்ட துண்டோ
ஒருவகை யாகிய மாட்டுப் பிறப்பிலே
இருவகை யாக இயம்பிய குலத்து
ஆண்பெண் மாறி யணைந்து மணைந்தபின்
75 கருப்பொறை யுயிர்ப்பது நாங்காண் கின்றிலேமே
எந்நிலத் தெங்கதின் கிடப்பது நின்றதோ
அந்நிலத் தந்தயின் தங்குறித் திடமலால்
மாறிவே றாகும் வழக்கமொன் றிலையே
பூசுரர் புணர்ந்து புலைச்சியரீன்ற
80 புத்திர ராயினோர் பூசுர ரல்லரோ
பெறுமுறை யொருமையும் பேதமாய்த் தோன்றலபோல்
மாந்தரிற் பேதமா மவரவர் கண்டுளார்
வாழ்நா ளுறுப்புமெய் வண்ணமோ டறிவினில்
வேற்றுமை யாவதாம் வெளிப்பட வின்றே
85 தென்றிசைப் புலையன் வடதிசைக் கேகிற்
பழுதற வோதிப் பார்ப்பா னாவான்
வடதிசைப் பார்ப்பான் தென்றிசைக் கேகின்
நடையது கோணிப் புலைய னாவான்
அது நிற்க,
90 சேற்றிற் பிறந்த செங்கழுநீர் போலப்
பிரமற்குக்
கூத்தி வயிற்றிற் பிறந்த வசிட்டரும்
வசிட்டர்க்குச்
சண்டாளி வயிற்றிற் பிறந்த சத்தியரும்

95 சத்திய ராயினர்
புலைச்சி தன்னைச் சேர்ந்து பிறந்த பராசரரும்
பராசர[illegible]
வாசவி தன் வயிற்றிற் பிறந்த வியாசரும்
இருடிக ளாயினர்
100 வேதங்க ளோதி மேன்மைப் பட்டு
மாதவ ராகி வையகந் தன்னில்
அருந்தவ மாமுனி யாம்பரா சரற்குக்
கருப்ப மெய்ப்பதிக் கட்டு[illegible] புலைச்சி
ஆதி வயிற்றினி லன்று பிறந்த
105 நான்முறை யோதிய கபில னாம் பாலனை
என்னுடன் பிறந்தவ ரெத்தனை பேரெனில்
ஆண்பா லைவர் பெண்பா லிருவர்
யாமவ ரிடத்தி லியம்புதல் கேண்மின்
ஊற்றுக் காடெனு மூர்தனிற் றங்கிய
110 வண்ணா ரகத்தில் உப்பை வளர்ந்தனள்
காவிரிப் பூம் பட்டினத்திற் கள்விலைஞர் சேரியில்
சான்றா ரகத்தினில் உறுவை வளர்ந்தனள்
நரம்புக் கருவியோர் நண்ணிடு சேரியில்
பாண ரகத்தில் ஔவை வளர்ந்தனள்
115 குறவர் கோமான் கொய்தினைப் புனஞ்சூழ்
வண்மலைச் சாரலில் வள்ளி வளர்ந்தனள்
தொண்டை மண்டலத்தில் வண்டமிழ் மயிலைப்
பறைய ரிடத்தில் வள்ளுவர் வளர்ந்தனர்
அரும்பார் சோலைச் சுரும்பார் வஞ்சி

உ

கணபதி துணை

திருச்சிற்றம்பலம்

யாழ்ப்பாணத்து நல்லூர்

சின்னத்தம்பிப் புலவரியற்றிய

# கல்வளையந்தாதி

மூலமும்; (சு [illegible]

[illegible] பழைய உரையும்.

---

இவை

சென்னைக் கிறிஸ்தியன் காலேஜ்

தமிழ்ப்போதகாசிரியர்

S. அனவரதவிநாயகம்பிள்ளை, M. A., L. T.,

அவர்களால் பரிசோதிக்கப்பட்டு,


சென்னை :

மதராஸ் ரிப்பன் அச்சியந்திரசாலையில்

பதிப்பிக்கப்பட்டன.

---

1913

விலை அணா 5.

# முன்னுரை.

தமிழாசிரியர்மாட்டு வான்முறையாகத் தமிழ் கற்கப் புகும் மாணவர் முதலாகக் கற்கத் தருவனவாயும் அவர்களாற் கற்கப்படுவனவாயு முள்ள நூல்களு ளொன்றாய மறைசையந் தாதி இலங்கைத்தீவில் யாழ்ப்பாணத்திற் றிகழ்ந்த சின்னத் தம்பிப் புலவரால் இயற்றப்பட்டது. அவர் சரித்திர முதலிய வற்றை யறிதற்கு ஆதாரங்கள் இந்தியாவில் சிறிதுமில்லை. இதுவரை வெளிவந்த மறைசையந்தாதிப் பதிப்புக்களும் இவ் விஷயத்தில் மௌனமே சாதித்தன. யாழ்ப்பாணத்து அ. சதாசிவம்பிள்ளை யென்பவர் எழுதி வெளிப்படுத்திய பாவலர் சரித்திரதீபகம் என்னும் நூல், தமிழ் நூல்கள் செய்தருளிய புலவர்கள் சரித்திரத்தை அகராதிமுறையால் விளக்குவது, யாழ்ப்பாணத்துப்புலவர்கள் சரித்திரங்களைக்கொஞ்சம் விசேஷ மாக எடுத்துரைக்கின்றது. அதிற்கண்டபடி: "யாழ்ப்பாணப் புலவருக்குள்ளே திலதம்போல் விளங்கிய இவர், நல்லூரில் இருந்தவரும், இற்றைக்கு (1886) முன்பின் கஅ0 வருஷங்களின் முன்னே இலங்காதிபதியாய் இருந்த சைமொன்ஸ் என்னும் உலாந்தா மன்னனாற் சேர்க்கப்பட்ட தேசவளமை என்னும் யாழ்ப்பாண நியாயப் பிரமாணத்தைப் பரிசோதனை பண்ணித் திருத்தும் பொருட்டு நியோகிக்கப்பட்ட பல பிரபுக்களுள் ஒருவருமாகிய வில்லவராய முதலியாரது புத்திரர். இப்புலவர் பாலியப் பிராயத்தே பாடும் வரம் பெற்றிருந்தார் என்று சொல்லுவர். வடகரை வித்துவான் ஒருவர் முதலியார்மேற்

பிரபந்தம் ஒன்று பாடிக்கொண்டு அவர் உறைவிடந் தேடிவந்து விசாரணை செய்தபோது, தெருவிற் பிள்ளைகளோடு பாக்குக் கட்டி விளையாடிக்கொண்டு நின்ற இப்பாலியப் புலவர் :

"பொன்பூச் சொரியும் பொலிந்தசெழுந் தாதிறைக்கும்
நன்பூதலத் தோர்க்கு நன்னிழலா—மின்பிரபை
வீசுபுகழ் நல்லூரான் வில்லவரா யன்கனக
வாசலிடைக் கொன்றை மரம்"

என்று தம் பிதா வீட்டுக்குக் குறிப்புச் சொற்றனராம். இவர் பாடிய அந்தாதிகள் இரண்டுள. ஒன்று மறைசையந்தாதி எனப் பேர்பெறும். நூறு செய்யுட்கொண்ட இது வேதாரண்ணிய ஈசன்மேலது.

"சேந்தா தியன்மணிப் பூண்புலி யூரற்குச் சேர்ந்தளித்த
சிந்தாத் தியானஞ்செய் வில்லவ ராசன் றிருப்புதல்வன்
நந்தா வளந்திகழ் நல்லைச்சின் னத்தம்பி நாவலன்சீர்
அந்தாதி மாலையை வேதாட வீசற் கணிந்தனனே"

என்றதனால் அவ் வந்தாதிக்கு இவர் ஆக்கியோன் எனல் விளங்கும். மற்றது கல்வளை அந்தாதி. இது சண்டிருப்பாயி லுள்ள கல்வளைப் பிள்ளையார் மேலது. முந்தினதில் நின்று சற்றே கருகல் கொண்டது.

* * * * *

இவ்விரண்டு அந்தாதிகளுள் மறைசை அந்தாதிக்கு உடுப்பிட்டி, ஶ்ரீ. ஶ்ரீ. அ. சிவசம்புப் புலவர் உரை இயற்றி அச்சிடுவித்திருக்கிறார். இந்த உரை நயப்பையும் வியப்பையும் "உதயதாரகைப்" பத்திரிகையிற் பேசி இருக்கிறோம்.

ஒருமுறை யாழ்ப்பாணம் வண்ணார் பண்ணையிற் கணே சையர் வீட்டில் அநேக வித்துவசனர் சபைகூடி இராமாயணத் துக்கு அர்த்தம் பண்ணிக்கொண்டிருக்குஞ் சமயம், அவர் சொல்லமுடியாது மலைத்த ஓர் பாட்டிற்கு இளைஞராதலில் ஓர் கோணத்தில் உளுக்கார்ந்திருந்த இப்புலவர் அர்த்தஞ்சொன்ன திறமைக்காக மகாகனவானுன அவ் ஐயர் பண்டாரக்குளம் என்னும் ஓர் வயலை இவர்க்கு வெகுமதி கொடுத்தனர். சின்னத்தம்பிப் புலவர் என்ற சொற்பொருட்படி சின்னப் பைய லாய் இருந்தபோதே சரஸ்வதியின் கடாட்சவீட்சணம் இவரு க்கு அகப்பட்டது என்றதற்குப் பின்வருங்கதை சாட்சியாகும்.

இவர் சிறுமையிலே பாடசாலைக்குச் செல்லாது கல்வியை அசட்டைசெய்து மாடுமேய்க்கும் பிள்ளைகளோடு விளையாடித் திரிபவராதலிற் றந்தையார் இவரைக் கண்டிக்க, இவர் அவர் கண்ணுக்குத் தென்படாது ஒளித்துப்போய்த் தாயாரிடம் அன்னம் வாங்கியுண்டு கட்டாக்காலிபோல் மறுபடி பாய்ந்து விடல் வழக்கம். இப்படித் திரியும்போது ஓர் நாள் வழக்கம் போலப் பிதா இல்லாத நேரம் வீட்டுக்கு வந்து போசனம் உண்டு, அவர் முதல் அடி எடுத்து எழுதி வைத்துவிட்டுப் போன ஓர் அந்தாதிப் பாட்டை இறப்பி விருக்கக் கண்டு எடு த்து, அதின் உ-ம் ௩-ம் ௪-ம் அடிகளை எழுதி வைத்துத் தன் பாட்டிற் போயினராம். பிதா வீட்டுக்கு வந்து முன் தொடங்கி விட்டுப்போன பாட்டை முடிக்கும்படி ஓலையைத் தேடி எடுத் துப் பாட்டு முடிந்திருக்கக் கண்டு, இங்கே வந்துபோனது யாரென்று மனைவியிடம் கேட்க, அவள் அச்சங்கொண்டு மறை

த்தும், பின் நாயகன் நெருக்கத்தால் அந்தப் பேய்ப்பையல் தான் உங்கே வந்தானென்று கூறப், பிதா மகிழ்ந்து இவரைத் தேடி அழைத்து நேசம் பாராட்ட, அப்புறம் இவர் அந்தாதி பாடி முடித்தனர் என்ப. இவரது சுற்றத்தார் நல்லூரிலும் சண்டிருப்பாயிலும் இருக்கிறார்கள். மானிப்பாய் அச்சியந்திர சாலைத் தலைவருள் ஒருவரான ஈ. ஈ. அ. சிற்றம்பலம் என்பவரும் இப்புலவர் வமிசத்தவரே."

நெடுநாள் முன்னர் இக் கல்வளையந்தாதி உரையோடு பிரசுரஞ் செய்யப்பட்டது. அஃது இக்காலத்து அருகி வழங்குதலாலும், தமிழ் கற்கும் மாணவர்க்கு உரையோடு கூடிய கல்வளையந்தாதிப் பதிப்பொன்று அவசியமா யிருத்தலாலும் இது பிரசுரிக்கப்பட்டது.

S. A. P.

---

செம்பொற் குவட்டினிற் பாரதந் தீட்டிய கோட்டினன்சீர்க்
கம்பக் கரிமுகன் கல்வளை வாழுங் கணபதிக்கு
நம்பற் கினியமுற் சங்கத்து நூலென நல்லைச்சின்னத்
தம்பிப் புலவனல் லந்தாதி மாலையைச் சாற்றினனே.

---

சிவமயம்.

# கல்வளையந்தாதி

## மூலமும் உரையும்.



### காப்பு

தார்கொண்ட பூமல் லிகைச்சேக்கை யிற்றும்பி சாலப்பம்புஞ்
சீர்கொண்ட கல்வளை யந்தாதி பாடத் திரைக்கடல்சூழ்
பார்கொண்ட பல்லுயிர்க் கானந்த மும்மதம் பாயுங்கும்பக்
கார்கொண்ட கம்பக் களியானை முன்னின்று காப்பதுவே.

(இதன்பொருள்.) தார்கொண்ட பூமல்லிகைச் சேக்கையில்-மலர்களைக்கொண்ட அழகாகிய மல்லிகைப் படுக்கைகளில், தும்பி சாலப் பம்பும் சீர்கொண்ட-வண்டுகள் மிக வொலிக்கும் அழகைக்கொண்ட, கல்வளை அந்தாதி பாட - கல்வளை அந்தாதியை (யான்) பாட, (அதற்கு இடையூறு வராமல்) முன் நின்று காப்பது-முன்னின்று காப்பது, திரைக்கடல் சூழ் பார் கொண்ட பல் உயிர்க்கு - திரையையுடைய கடலாற் சூழப்பட்ட பூமி (தன்கட்) கொண்ட பலவகையாகிய உயிர்களுக்கும், ஆனந்த மும்மதம் பாயும் - ஆனந்தத்தைச் செய்வதாகிய (அருள்) மும்மதம் பாயப்பெறும், கார்கொண்ட கும்பம் - அழகைக் கொண்ட மத்தகத்தினையும், களி - களிப்பினையு முடைய, கம்ப யானையே - தூணிற் கட்டப்படும் யானையாகிய விநாயகக் கடவுளே.

(குறிப்புரை.) முற்றும்மை விகாரத்தாற் றொக்கது. ஆனந்தத்தைச்செய்வதை ஆனந்தமென்று காரணத்தைக் காரியமாக வுபசரித்தார். ஆனந்தமென்றதனால் அருள் வருவிக்கப்பட்டது. பசுயும் யானையென முடிக்க. யானையென்று உபசரித்ததற் கேற்பக் கம்பத்திற் கட்டப்படுதல் கூறப்பட்டது. அடியாருடைய உள்ளமாகிய கம்பத்திற் கட்டப்படுதல் குறிக்கப்பட்டதெனினு மமையும். ஈற்றேகாரம் பிரித்துக் கூட்டப்பட்டது.

ஒன்றா யிருசுடர் முத்தொழி னான்மறை யோதுமைந்தாய்
நன்றாய வாறங்கம் யாவுக்குங் காரண நாதனுமாய்
நின்றாய்நின் கல்வளை யந்தாதிபாடவென் னெஞ்சகத்துப்
பொன்றா வருள்புரி வாயானை மாமுகப் புங்கவனே.

(இ-ள்) ஒன்றாய் - ஏகவஸ்து வாகியும், இருசுடர் (ஆய்)-(சூரிய சந்திரராகிய) இருசுடர் ஆகியும், முத்தொழில் (ஆய்) - (சிருட்டி திதி சங்காரமென்னும்) முத்தொழிலை யுடைய மும் மூர்த்திகள் ஆகியும், நான்மறை (ஆய்) - நான்குவேதங்கள் ஆகியும், ஓதும் ஐந்து ஆய் - சொல்லப்படுகின்ற பஞ்சபூதங்கள் ஆகியும், நன்று ஆய ஆறு அங்கம் (ஆய்) - நன்மை ஆகிய ஆறு வேதாங்கம் ஆகியும், யாவுக்கும் காரண நாதனும் ஆய் - (மற்றுமுள்ள) யாவற்றுக்கும் காரண கடவுள் ஆகியும், நின்றாய் - நின்றவனே, மா யானை முகப் புங்கவனே - பெருமையாகிய யானைமுகக் கடவுளே, நின் கல்வளை அந்தாதி பாட-நுமது கல்வளைப் பதியைப் புகழும் (யமக) அந்தாதியை (யான்) பாட, என் நெஞ்சத்துப் பொன்றா அருள் புரிவாய் - எனது நெஞ்சினுள் அழியாத அருளினைத் தந்தருள்வீர்.

(கு-ரை) ஒன்று, ஐந்து, முத்தொழில்: ஆகுபெயர்கள்.

## நூல்

*கற்பக நாடர் பதின்சதக் கண்ணனெண் கண்ணன்றொழுங்*
*கற்பக வஞ்சி யிடக்கண்ணன் றந்தமுக் கண்ணனன்றிற்*
*கற்பக வேலெறி வேடுணை வன்கல் வளைப்பதிவாழ்*
*கற்பக நன்னிழல் சேர்ந்தார் கருங்கரை கண்டவரே.*

(இ-ள்) *கற்பக நாடர் - கற்பக விருக்ஷத்தையுடைய விண்ணுடராகிய தேவரும், பதின்சதக் கண்ணன் - ஆயிரங்கண்ணனாகிய இந்திரனும், எண் கண்ணன் - பிரமதேவனும், தொழும் - வணங்கும், கற்பு அக வஞ்சி இடக்கண்ணன் தந்த முக்கண்ணன் - கற்பையுடைய திருவுள்ளத்தையுடைய வஞ்சிக்கொம்பு போலும் உமாதேவியாரை வாமபாகத்தில் உடையராகிய சிவபெருமான்பெற்றருளிய முக்கண்ணரும், அன்றில் கல் பக வேல் எறி வேள் துணைவன் - அன்றிற் பறவையின் பெயராகிய கிரௌஞ்சம் என்னும் பெயரையுடைய மலை பிளக்க வேலாயுதத்தை எறிந்த முருகக்கடவுளது துணைவருமாகிய, கல்வளைப் பதி வாழ் கற்பக நல் நிழல் சேர்ந்தார் கரு கரை கண்டவரே - கல்வளைப்பதியில் வாழ்கின்ற கற்பக விநாயகரது நல்ல திருவடி நிழலைச் சேர்ந்தவர் பிறவி (வெய்யிலின்) எல்லையைக் கண்டவரே (ஆவார்).*

(கு-ரை) *அன்றிற்கல் ஓர் குறிப்புமொழி.*

***க**ண்டலம் போதைப் புளினமென் றோர்ந்துகங் கம்பதுங்கிக்*
*கண்ட லமர்ந்து சிறகாற்றுங் கல்வளைக் கற்பகநின்*
*கண்டல மூன்று மெனையாள்பொற் பாதமுங் காணவிண்ணு*
*கண்டலன் போற்கண் படைத்திலன் வாசக் கமலத்தனே.*

(இ-ள்.) *கங்கம் கண்டலம்போதை புள் இனம் என்று ஓர்ந்து - பருந்து தாழம்பூக்களைத் (தான் பக்ஷித்தற்கு ஆகும்) பறவை இனம் என்று கருதி, (அவற்றைக் கவரவென்று) கண்டல் பதுங்கி அமர்ந்து சிறகு ஆற்றும் - கண்டன் மரத்திற் பதுங்கி இருந்து சிறகை ஆற்றப்*

பெறும், கல்வளைக் கற்பக - கல்வளைப் பதியில்வாழுங் கற்பக விநாய கரே, நின் கண்டலம் மூன்றும் - நுமது கண்கள் மூன்றையும், எனை ஆள் பொன் பாதமும் காண-என்னையாண்டருளுகின்ற பொன்போ லும் திருவடியையும் (யான்) காண, வாசக்கமலத்தன்-நறு நாற்றத்தை யுடைய அம்புயாசனத்தன், விண் ஆகண்டலன் கண்போல் - விண் ணுலகத்திலுள்ள இந்திரனுடைய ஆயிரங் கண்கள்போல, படைத்தி லன் - (எனக்கும் ஆயிரங் கண்களைப்) படைத்திலன்.

(கு-ரை.) புள்ளினத்தில் ளகரம் தொகுத்தது. கண்டலமாந்து என்று பாடமாயின், கங்கம் கண்டலம் போதை கண்டு புள் இனம் என்று ஓர்ந்து பதுங்கி அலமாந்து என்றியைத்துப் பொருளுரைக்க.

கவானரம் பையஞ் சுரும்பு விரும்பு கருங்குழற்போ
கவானரம் பைக்குலம் போற்றிட வாழ்தல்கண் ணேனினிச்சங்
கவானரம் பைங்கத லிக்கனி சிந்திடுங் கல்வளைப்புங்
கவாநரம் பைத்திகழ் யாழ்க்கூற் றுமையருள் காதலனே.

(இ-ள்.) சங்க வானரம் பைங்கதலிக் கனி சிந்திடும் கல்வளைப் புங் கவா-கூட்டமாகிய குரங்குகள் செவ்வியாகிய வாழைப்பழங்களைச் சிந் துகின்ற கல்வளைப் பதியி லெழுந்தருளி யிருக்கின்ற தேவரே, நரம்பு திகழ் யாழ் கூற்று உமை அருள் காதலனே - நரம்புகள் விளங்குகின்ற யாழிசைபோலும் மொழியினையுடைய உமாதேவியார் பெற்றருளிய புத்திரரே, கவான் அரம்பை - தொடையாகிய வாழைத்தண்டையும், சுரும்பு விரும்பு அம் கரும் குழல் - வண்டுகள் விரும்புகின்ற அழ கிய கருமையாகிய கூந்தலையுமுடைய, அரம்பை குலம் போற்றிட - தேவஸ்திரீகள் கூட்டம் துதிசெய்ய, போக வான் வாழ்தல் - போக நிலமாகிய விண்ணுலகத்தில் வாழ்தலையும், இனி கண்ணேன் - இனி (பெரும்பேறெனக்) கருதேன் (நும்முடைய திருவடியின் கீழிருத்த லைத் தந்தருள்வீர்).

(கு-ரை.) அரம்பை, போகம், யாழ்: ஆகுபெயர்கள். உயர்வு சிறப் பும்மை விகாரத்தாற் றொக்கது. ? சாரியை, (௫)

அருளத்த னந்து சிலைகதை வாள்சுட ராழிகொள்ளை
யருளத்த னந்தந் தெரியா வகைநிற்கு மைம்முகனீன்
றருளத்த னந்த வனஞ்சூழுங் கல்வளை யண்ணலடி
யருளத்த னந்தரம் வாழ்வானென் றூல்வினை யஞ்சிடுமே.

(இ-ள்.) அருள் அத்தன் - அருள் (வடிவாகிய உமாதேவியை வாம) பாகத்திலுடையவரும், நந்து சிலை கதை வாள் சுடர் ஆழிகொள் ஐயர் உள-சங்கு வில் தண்டு வாள் சுடரையுடைய சக்கரமாகிய பஞ்சாயுதங்களைக்கொண்ட விஷ்ணுமூர்த்தி கருதித்தேடவும், (அவருக்கு) தன் அந்தம் தெரியா வகை நிற்கும் ஐம்முகன் ஈன்றருள் அத்தன் - தமது (அடியாகிய) முடிவு தெரியப்படாதவகை நின்றருளிய ஐம்முகக் கடவுளுமாகிய சிவபெருமான் பெற்றருளிய கடவுள், நந்தவனம் சூழும் கல்வளை அண்ணல் - பூந்தோட்டஞ் சூழப்பெற்ற கல்வளைப் பதியில் வாழும் பெருமையிற் சிறந்தவர், அடியர் உளத்து அனந்தரம் வாழ்வான் - அடியாருடைய நெஞ்சத்தி லெப்போதும் வாழ்பவர், என்றூல்-என்று துதித்தால், (அங்ஙன மவ்விநாயகக் கடவுளைத் துதிப்பவரைச் சார்ந்திருத்தற்கு) வினை அஞ்சிடும் - வினைக ளஞ்சும்.

(கு-ரை.) தன்னந்தம் என்பதில் னகரந்தொகுத்தது. நந்தனவனம் என்பதில் னகரங் குறைந்தது. (ச)

அஞ்சத் திரத்தன் முழுவென வேகொதித் தார்த்துரப்பி
யஞ்சத் திரத்தந் தகன்வரும் போதுன் னபயநடை
யஞ்சத் திரத்த வடிவா ணயனத் தமலைபெற்ற
வஞ்சத் திரத்தன் றுணைவாதென் கல்வளை யானந்தனே.

(இ-ள்.) அஞ்சத்து நடை - அன்னத்தினது நடைபோலு நடையினையும், இரத்த வடிவாள் நயனத்து - இரத்தத்தைக்கொண்ட கூர்மையாகிய வாள்போலுங் கண்ணினையு முடைய, அமலை பெற்ற-உமாதேவியார் பெற்றருளிய, அம் சத்திரத்தன் துணைவா - அழகிய வேற்படையையுடையராகிய முருகக்கடவுளது துணைவரே, தென் கல்வளை

ஆனந்தனே-அழகாகிய கல்வளைப் பதியில் வாழு மானந்த குணமுடையவரே, திரத்து அந்தகன் - வலியினையுடைய கூற்றுவன், அஞ்ச அத்திரத்தன் முழவு எனவே கொதித்து ஆர்த்து உரப்பி - பஞ்ச (புஷ்ப) பாணங்களையுடையனாகிய மன்மதனது முழவப்பறைபோலவே வெகுண்டார்த்துரப்பி, அஞ்ச வரும்போது-அஞ்சும்படி வரும்போது, உன் அபயம் - (யான்) நுமக்கடைக்கலம்.

(கு-ரை.) ஏகாரம், தேற்றப்பொருட்டு. (ரு)

தனந்தனந் தந்தி மருப்பன்ன மாதர் தரைவிரும்பு
தனந்தநந் தந்திகழ் தண்டுறை தோறுமென் சஞ்சரிகந்
தனந்தனந் தந்திமி யென்கல் வளையன் சங்கக்குழைக்கா
தனந்தனந் தந்தமொன் றானென்று நெஞ்சந் தனிலுன்னுமே.

(இ-ள்.) தனம் - பொன்னையும், தந்தி மருப்பு அன்ன தனம் மாதர் - யானைக்கொம்பை நிகர்த்த முலையையுடைய பெண்ணையும், தரை-மண்ணையும், விரும்புதல் நந்த - விரும்புதல்கெட, நந்தம் திகழ் தண் துறை தோறும் - சங்குகள் விளங்குகின்ற குளிர்மையாகிய நீர்த்துறைதோறும், மெல் சஞ்சரிகம் தனந்தனந் தந்திமியென் கல்வளையன் - மென்மையாகிய வண்டுகள் தனந்தனந் தந்திமியென் றொலிக்கப்படுங் கல்வளைப் பதியையுடையவர், சங்கம் குழை காதன் நந்தன் - சங்கக்குண்டலத்தை யணிந்த திருச்செவியினையுடையராகிய சிவபெருமானுடைய புத்திரர், அம் தந்தம் ஒன்றான்-அழகிய கொம்பொன்றை யுடையவர், என்று நெஞ்சந்தனில் உன்னும் - என்று (விக்கினேசுவரரை) மனத்தி னினையுங்கள் (சகத்தீரே).

(கு-ரை.) நந்தனன் என்பதில் னகரந்தொகுத்தது. (சு)

சந்தன மின்னுபொற் கச்சணி பாரத் தனதடம்ப
சந்தன மின்னிடைப் பூவஞ்சிக் கொம்பன தையலுட்க
சந்தன மின்னலுற் றுள்கல் வளையன் றனதிடம்போஞ்
சந்தன மின்னம் வரக்கண்டி லேலென்ன தாமதமே.

(இ-ள்.) மின் அன இடை வஞ்சி பூ கொம்பு அன தையல் - மின்னலை நிகர்த்த இடையினையுடைய வஞ்சிப் பூங்கொம்பை யொத்த தலைவியானவள், சந்தனம் மின்னு பொன் கச்சு அணி பாரம் தனதடம் பசந்து - சந்தனத்தையுடைய விளங்குகின்ற பொற்கச்சணியப்பட்ட பாரமாகிய தனதடம் பசலையுற, அனம் உள் கசந்து - அன்னத்தை யுள் வெறுத்து, இன்னல் உற்றாள் - துன்பமுற்றாள், கல்வளையன் றனது இடம் சந்து போம் அனம் - கல்வளைப்பதியை யுடையராகிய விநாயகரிடத்துத் தூதுசென்ற அன்னம், இன்னும் வர கண்டிலேம் - இன்னமும் வரக்கண்டிலேம், என்ன தாமதம் - யாது தாமதம் ?

(குறி.) அன்ன அன்ன அன்னம் அன்னம் என்பவற்றில் னகரங்கள் இடைக்குறையாயின. மேல்வரு மிடைக்குறைகளையு முய்த்துணர்ந்துகொள்க. சந்தனமின்னு என்றதற்கு சந்தனம் விளங்கப் பெற்ற என்று பொருளுரைப்பினு மமையும். பசந்து பசக்கவென்ப தன் றிரிபு. இது புறப்பொருளில் கடவுண்மாட்டு மானுடப்பெண்டிர் நயந்த பக்கத்தில் தலைவியுடைய வருத்தத்தைக் குறித்துத் தூதனுப்பிய அன்னத்தைக்காணாது வருந்துந் தோழியர் தம்முட் கூறுங் கூற்று. (எ)

தாமதிக் காந்தச் சிலைபோன் மனத்தினைத் தந்தசைகா
தாமதிக் காந்தகை மென்மொழிப் பூமின் றலைமகன்வே
தாமதிக் காந்தர மாகிநின் றோன்மைந்த தண்ணிதழித்
தாமதிக் காந்தம் புகழ்கல் வளையநின் றாட்கஞ்சமே.

(இ-ள்.) அசை காதா - அசைகின்ற காதையுடையவரே, மது இக்கு ஆம் தகை மெல்மொழி பூமின் தலைமகன் - தேனுங்கரும்பும் (நிகர்) ஆகும் (மதுரமாகிய) தன்மையையுடைய மென்மையாகிய மொழியினையுடைய இலக்குமிக்கு நாயகராகிய விஷ்ணுவும், வேதா - பிரமனும், மதிக்க அந்தரமாகி நின்றோன் மைந்த - கருத மறைவாய் நின்றவராகிய பரமசிவனுடைய குமாரரே, தண் இதழித் தாம - குளிர்மையாகிய கொன்றைப் பூமாலையையுடையவரே, திக்கு அந்தம் புகழ்

கல்வளைய-திக்குகளின் முடிவு (வரைக்கும்) புகழப்படுகின்ற கல்வளைப் பதியையுடையவரே, மதிகாந்தம் சிலைபோல் மனத்தினை தந்து-சந்திர காந்தக்கல்லை யொத்த (உருகும்) மனத்தை (முன்னர்த்) தந்து (நமக் கன்பருக்கி), நின் தாள் கஞ்சம் தா-நுமது திருவடித்தாமரைப்பூவைப் (பின்னர்த்) தந்தருள்வீர்.

(கு-ரை.) இச்செய்யுள் பூட்டுவிற்பொருள்கோள். பூவின்றலை மகன் என்றுபாடமாயின் பூமிதேவிக்கு நாயகரென்று பொருளுரைக்க. மதிக்காந்தாம் என்பது மரூஉமொழி. திக்காந்தம் நீட்டல் விகாரம் பெற்றது. இதழி, கஞ்சம்: ஆகுபெயர்கள். மேல் இவ்வாறு பெருவழக் காவரு மாகுபெயர்களை உய்த்துணர்ந்துகொள்க. (அ)

கஞ்சக் கரந்தனின் மூவிலை வேல்கும்பங் கார்முகஞ்சங்
கஞ்சக் கரங்கதை மாதுளை மேந்தி கவின்களம்பூ
கஞ்சக் கரம்பயில் வேல்வல வைக்கொரு காந்தன்பொன்னு
கஞ்சக் கரப்புவி கும்பிடுங் கல்வளைக் கைவரையே.

(இ-ள்.) கஞ்சம் கரம் தனின் மூவிலைவேல் கும்பம் கார்முகம் சங்கம் சக்கரம் கதை மாதுளம் ஏந்தி - தாமரை மலரை நிகர்த்த திருக் கரங்களில் மூன்றாகிய இலைபோலுந் தலைகளையுடைய சூலாயுதத்தை யும் கும்பத்தையும் வில்லையும் சங்கையுஞ் சக்கரத்தையுந் தண்டாயுதத் தையு மாதுளம்பழத்தையு மேந்தியிருப்பவரும், பூகம் கவின் களம் - கமுகுபோலு மழகிய கழுத்தையும், அரம் பயில் வேல் சக்கு - அரம் பயின்ற வேல்போலுங் கண்ணிணையுமுடைய, வலவைக்கு ஒரு காந்தன்- வல்லவைக்கோர் நாயகரும், பொன் நாகம் சக்கரம் புவி கும்பிடும் கல் வளை கை வரையே - பொன்னாகிய தேவலோகத்தாரும் வட்டமாகிய பூமியிலுள்ளாரும் வணங்குங் கல்வளைப்பதியிலுள்ள யானையே.

(கு-ரை ) நாகம், புவி: ஆகுபெயர்கள். பூகம், மெலிக்கும்வழி மெலித்தல். பயிலல் ஈண்டு அராவுதல். அரம் பயில்வேல் என்பதற்கு அரத்தையும் (போர்) பயிலுகின்றவேலையும் என்று பொருள் கூறினு மமையும். ஈற்றேகாரந் தேற்றப்பொருட்டு. (கூ)

